# நான்



நான் யார்? உயிரும் அசைவுமற்ற ஒரு சடப்பொருளா? உயிர் இருந்தும் உணர்ச்சியற்ற செடிகொடியா? உயிர் அசைவு உணர்ச்சி அனைத்துங்கொண்ட ஓர் விலங்கா? (**நான் ஒரு மனிதன்; பகுத்தறிவுள்ள ஓர் பிராணி.**) (thinking animal)

மனிதனுக்கு விலங்குகளுக்குள்ளதுபோல் கண், காது, மூக்கு முதலிய உறுப்புக்களுண்டு. அவனுக்குப் பசி தாகமு முண்டு. அவனுக்குப் பிள்ளைகளுண்டு. ஆனால் அவன் பகுத்தறியக் கூடியவன். நீதி, அநீதி, வெண்மை கருமை—இவைகளைப்பற்றி எண்ணங்கள் உருவாக்க வல்லவன். சிந்தனைகளைச் சிந்திக்க வல்லவன். நன்மை தீமையை உணர்ந்து, பொறுப்புடன் வாழக்கூடியவன். சுயாதீனம்கொண்டவன். அனைத்தையும் பகுத்துப் பகுத்து ஆராய்ந்தறியக்கூடியவன். அவன் ஒரு பகுத்தறியும் பிராணி.

'மக்கள் தாமே ஆறறிவினரே'. விலங்குகட்கு புலன் அறிவாகிய ஐம்புலன் அறிவுமட்டுமே உண்டு. மனிதனுக்கோ ஐம்புலனறிவோடு, ஆறும் அறிவாகிய பகுத்தறிவும் உண்டு என்றார் தொல்காப்பியர்.

திருவள்ளுவரோ மனத்தை அதுபோன போக்கில் போகவிடாமல், அவ்விஷயங்களின் நன்மை தீமைகளை

ஆராய்ந்து, தீயதிலிருந்து நீக்கி, நல்லதை நாடுவதே அறிவு என்று கூறியுள்ளார்.

> சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
> நன்றின்பால் உய்ப்பது அறிவு.

**மனிதனுக்கும் விலங்குக்குமுள்ள வேறுபாடு :**

1. மனிதனுக்கும் விலங்குகட்கும் பற்பல வேறுபாடுகள் உள. விலங்கு சுபாவ நாட்டத்தால் (instinct) நடத்தப்படுகிறது; புத்தியறிவால் அல்ல. தெனுலி இராமன் பூனை பாலைக் கண்டதும் அஞ்சி ஓடியது. காரணம் என்ன? சூடு பட்ட பூனை அடுப்பண்டை அணுகாது என்று அறிந்திருந்த இராமன் தன் பூனைக்குக் கொதிக்கக் கொதிக்கப் பாலைக் குடிக்கக் கொடுத்தான். பூனைக்குச் சரியான சூடு! அந்நாளிலிருந்து பாலைக் கண்டதும் ஒரே ஓட்டம். பகுத்தறிவுதான் கிடையாதே. ஏதோ வெள்ளையாய் தோன்றுகிறது; பால் வாடை அடிக்கிறது; சூடு உணர்வு வருகிறது. பாலென்று கண்டு வாலைத் தூக்கிக்கொண்டு ஒரே ஓட்டம் ஓடுகிறது. மனிதன் இப்படி நடப்பாளு? நமது நண்பன் நமக்குக் கொதிக்கும் காபியைக் குடிக்கக்கொடுத்து, எல்லோருக்குமுன் நம்மை பரதநாட்டியம் ஆடவைத்துவிடுகிறுன் என்று வைத்துக்கொள்வோம். அவன் நமது மானத்தை வாங்கிவிடுகிறுன். அதனுல் நாம் காப்பி குடிப்பதையே விட்டுவிடுவோமா? அல்ல. நாம் சுபாவ நாட்டத்தால் ஆளப்படுகிற விலங்குகளல்ல. நாம் பகுத்தறிவுள்ளவர்கள். அதிக சூடான காபியாயிருந்தால் ஆறவைத்துக் குடிப்போம்.

2. விலங்குகள் கருவிகளைப் பயன்படுத்துவதில்லை. புதிதாய் எதையும் கண்டுபிடிப்பதுமில்லை. மனிதன் மட்டுமே புதுப்புதுக் கருவிகளைக் கண்டுபிடிக்கிறுன்; அவைகளைப் பயன்படுத்துகிறுன். மனிதன் மிலேச்சனுய் இருந்த நாட்களிலுங்கூட, மரங்களை வெட்டினுன்; குடிசைகளைக் கட்டினுன். நிலத்தை உழுதான்; காய்கறியைப் பயிரிட்டான். மிக முரடான, வடிவமற்ற கருவிகளை அவன் பயன்படுத்தினுன். உண்மையே. ஆனுல் அவைகளைக் கண்டுபிடித்தவன் அவன்தான்.

நாளடைவில் அவைகளை நுட்பக் கருவிகளாக்கியதும் அவனே, விலங்குகள் எக்காலத்திலாவது கருவிகளைக் கண்டுபிடித் தனவா? பயன்படுத்தினவா? நாம் கேள்வியுற்றிருக்கிறோமா? அன்றும் இன்றும் இயற்கை கீறிய கோட்டை அவைகள் தாண்டினவையல்ல; தாண்டவும் இயலாது. அவைகள் நிலத்தை உழுததுமில்லை; உழுவதுமில்லை; உழப்போவது மில்லை.

3. புத்தியுள்ள மனிதன்மட்டுமே தப்புத் தவறுகள் செய் யக்கூடும். அவன் ஆராய்ச்சியில் இறங்குகிறான். பழமை யைப் புதுமையாக்க எண்ணுகிறான். ஒரு ஆராய்ச்சியிலிருக் கும்போது, எதிர்பாராத ஒரு புது விளைவைக் காண்கிறான். அதில் புத்தியைச் செலுத்துகிறான். உலகிற்கு ஒரு பெரும் நன்மையை எடுத்தோதுகிறான். விலங்குகள் நடுவில் ஆராய்ச்சி யுண்டா? திகைப்புண்டா? வியப்புண்டா? தவறுகளுண்டா? எதிர்பாராத நன்மைகளோ தீமைகளோ உண்டா? ஒரு சிட்டுக் குருவி தான் தொடங்கிய கூட்டை முடிக்க முடியாமல் வருந் தியதுண்டா? நீந்தப் பழக்கமின்றி வாத்துக்குஞ்சு தண்ணீரில் மாண்டதுண்டா? தேனீக்கள் தாங்கள் செய்த கூடு சிறிது கோணலாய்ப் போனதைக்கண்டு கலக்கங்கொண்டதுண்டா? விலங்குகளுக்குச் சுவாதீனமென்பது கிடையாது. கடிகாரம் ஓடுவதுபோல், சுபாவநாட்டங்களால் நடத்தப்படுகின்றன. எப் போதும் இயல்பு நாட்டங்களின்படி, கடவுள் அமைத்தபடி செய்துமுடிக்கவேண்டும். தேனீக்களால் தங்கள் கூட்டைக் கோணலுமாணலுமாய்ச் செய்யமுடியாது; செய்யவும் தெரி யாது. மனிதன் எத்தனை தவறுகளைச் செய்கிறான்! அவ னுக்குத்தான் எத்தனை ஏமாற்றங்கள்!

4. விலங்குகளிடம் நாகரீகம், வளர்ச்சி, மேம்பாடு என்பதொன்றும் கிடையாது. தரையில் ஊர்ந்தால், உலகம் முடியும்வரை ஊர்வனவாகவே இருக்கும். பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் சிட்டுக் குருவிகள் எங்ஙனம் கூடுகள் கட்டினவோ, அங்ஙனமே இன்றைக்கும் கட்டி வருகின்றன. மாற்றமென்பது கிடையாது. தேர்ச்சி கிடையாது. அப்

போது எங்ஙனம் உயிர் வாழ்ந்தனவோ, அங்ஙனமே இப்போதும். அவைகள் குடிசைகள் கட்டவில்லை. பாதை போடவுமில்லை. மனிதன் அப்படியல்ல. அவன் தன் பகுத்தறிவைப் பயன்படுத்தினுன். அன்று மண்ணில் நடந்தவன் இன்று விண்ணில் பறக்கிருன். அன்று கட்டுச் சாதம் கட்டிக்கொண்டு மாட்டு வண்டியில் பல நாள் பயணம் செய்தவன் இன்று பஸ்ஸிலும் ரயிலிலும் ஏறி வெகு வேகமாய்ச் செல்கிருன். அன்று ஐம்பது கல்லுக்கு அப்பால் நிகழ்ந்தவை அவன் காதுக்கு எட்ட நாட்கள் பலவாயின; இன்று ஆயிரம் கல் தொலைக்கப்பால் நடக்கும் சொற்பொழிவுகளையும் வீட்டிலிருந்தவாறே அலுங்காமல் குலுங்காமல் வானெலி மூலம் கேட்டுக் களிக்கிருன். மனிதனின் அறிவின் கூர்மை தான் என்னே! அவனது நாகரீக வளர்ச்சி தான் என்னே!



# ஆன்மா



மனிதனுக்கும் விலங்குகட்கும் பல ஒற்றுமைகளிருந்த போதிலும், மிக முக்கிய வேறுபாடுகள் பல இருக்கின்றன. இம் முக்கிய வேறுபாட்டிற்கு அடிப்படையாயிருப்பது என்ன ? **மனிதனின் ஆன்மா !**

மனிதனுக்கு ஆன்மா உண்டா, அதைக் கண்டது யார், என்று கேட்பர் சிலர். நாம் காணாததெல்லாம் கிடையாது என மறுப்பதும் புத்தியா ? உயிரைக் கண்ணால் கண்டவன் எவனுமில்லை. அதை நுகர்ந்தவனுமில்லை; அதைத் தொட்டுப் பார்த்தவனுமில்லை. எனினும் உயிரை மறுக்கிற மனிதனும் உண்டோ ? ஐம்புல அனுபோகம் நமக்கில்லை யென்றாலும், விளைவுகளிலிருந்து உயிர் உண்டு என முடிவுக்கு வருகிறோம்.

மனிதனுக்கும் சரி, விலங்குக்கும் சரி உயிரோடிருப்பதற்கு ஒரு சக்தி தேவை. மனிதனுக்கு புத்தியுண்டு; மனதுண்டு; சுவாதீன முண்டு. விலங்குக்கோ பகுத்தறியும் புத்தியுமில்லை; சுவாதீனமுமில்லை. விலங்கு ஒருபோதும் இயற்கைக்கு மாறாய் நடக்காது. வயிறு நிறைந்திருந்தால் உணவை உண்ணாது. மனிதனோ வயிறு புடைத்திருந்தாலும் அவனுக்கு விருப்பமுள்ள அல்வாவோ ஜிலேபியோ அகப்பட்டால் விட மாட்டான். ஆகையால் மனிதனை நடத்தும் சக்திக்கும் விலங்குகளை நடத்தும் சக்திக்கும் இனமில்லா வேறுபாடு இருக்கிறது.

மனிதனை நடத்தும் சக்தியை ஆன்மா (human soul) என்றழைக்கிறோம். அது பகுக்கப்படக் கூடிய ஓர் சடப் பொருளல்ல (matter) ; அது துண்டுபடக் கூடாது, பங்கு பாகமற்ற ஓர் சித்துப் பொருள் (spirit).

நாம் 'வெண்மை' என்று சொல்லுகிறோம். 'வெண்மை' என்பது எங்காகிலும் இருக்கக் கண்டது யார்? அதைத் தொட்டது யார்? வெள்ளைப் பொருளை நாம் பார்த்திருக்கிறோம்; தொட்டிருக்கிறோம்; சுவைத்திருக்கிறோம்; அதைப் பற்றிப் புலன்களால் அறிந்திருக்கிறோம். வெள்ளைச் சுவர், வெள்ளைத் துணி, இது போன்ற வெண்மையான பொருட்கள் உண்டு. ஆனால் 'வெண்மை' என்று தனிமையாய் ஒரு இடத்திலுமில்லை. குறும்புக்காரப் பையன், குறும்புக்காரப் பெண், குறும்புக்கார நாய் இவைகளை நாம் கண்டிருக்கிறோம். யாராகிலும் 'குறும்புத் தனத்தை'க் கண்டிருக்க முடியுமா? 'குறும்புத்தனம்' என்று ஒரு பொருளும் கிடையாது. நாம் புலன்களால் அறியும் பொருட்களிலிருந்து, காலம், இடம் முதலியவைகளைப் பிரித்து 'வெண்மை', 'குறும்புத்தனம்' எனும் பண்புகளை நம் புத்தி கிரகித்துக் கொள்கிறது. இத்தகைய குணம் எக்காலமும், எவ்விடமும் வெள்ளையாயுள்ள பொருட்களுக்கும், குறும்பு செய்வனவற்றும் பொருந்தும். (abstract ideas)

நாம் சிந்திக்கிறோம். நம் எண்ணங்களை ஒன்றோடொன்று ஒப்பிட்டுப் பார்க்கிறோம். நமக்கு விருப்பமானால் ஒன்றை விரும்புகிறோம் ; விருப்பமில்லாவிடில் அதை வெறுக்கிறோம். நீதி, அநீதி, தயை, சாந்தம் இது போன்ற நீளம், அகலம், கனம், வடிவமற்றவைகளைப் பற்றியும் தகுதியான எண்ணங்களைக் கொண்டிருக்கிறோம். இங்ஙனம் அகலம், நீளம், கனம், வடிவம் இவைகளைக் கடந்திருக்கும் எண்ணங்களும், விருப்பங்களும் சடலத் தன்மையற்றவை. ஆனதால் சித்து ரூபமானவை (spiritual ideas). நினைவுகள் சித்து ரூபமானவையானால் அவைகள் உதிக்கும் மூலப் பொருளாகிய ஆன்மா சடலத் தன்மை கொண்டதாயிருக்கக் கூடுமா? ஆனதால் மானிட ஆன்மா ஒரு சித்துப்பொருள்.

'Man can have immaterial thoughts. We know that the effect is not above the cause; must be at least something of the nature of the cause. Therefore the cause of these immaterial thoughts, the Soul, must be also immaterial, that is, spiritual. Therefore the Soul is Spiritual.'

ஆகையால் மனிதன் ஆத்மீக வாழ்க்கையில் ஈடுபட வேண்டிய ஒரு பகுத்தறிவுள்ள பிராணி. எவ்வளவுக்கு அறிவை அதிகப்படுத்துகிறானோ, அவ்வளவுக்கு அவன் மனிதன்; எவ்வளவுக்கு அறிவை அசட்டை செய்து, உடலைக் கவனித்துப் பேணி வளர்க்கிறானோ அவ்வளவுக்கு அவன் ஒரு மனிதனன்று; ஓர் விலங்கு.






**1. கடவுள் உண்டா?** (1) ஒரு பனங்காட்டுக்குச் செல்லுகிறோம். அங்கே ஒரு ரூபாய் கிடக்கிறது. ரூபாயைப் பார்த்ததும், அது பனைமரத்திலிருந்துதான் பழுத்து விழுந்திருக்கவேண்டுமென்று மரத்தையா அண்ணாந்து பார்க்கிறோம்? அல்லது தானாய் அந்த ரூபாய் உருவெடுத்து வந்திருக்க வேண்டுமென்று எண்ணுகிறோமா? நமது புத்தி நமக்குச் சொல்வதென்ன? **காரணமில்லாமல் காரியம் கிடையாது.** ஆகையால் யாரோ இங்கு வந்திருக்கவேண்டும். ஒரு ஆளோ, பல ஆட்களோ, ஆண்களோ பெண்களோ, மாணவர்களோ மாணவிகளோ—அதெல்லாம் நாம் தீர்மானமாய்ச் சொல்ல முடியாது. ஆனால் கட்டாயம் யாராவது வந்திருக்கவேண்டும். இல்லாவிட்டால், இங்கே இந்த ரூபாய் இருப்பதற்குக் காரணமில்லை என்று திட்டமாய்க் கூறுகிறோம்.

மேலும், செய்வதற்கு ஒருவருமில்லையானால், எந்தப் பொருளும் செய்யப்படமாட்டாது என்பது அனைவரும் அறிந்த உண்மை. பாமர மக்களும், பரந்த அறிஞர்களும் அன்றாட வாழ்க்கையிலும் விஞ்ஞான ஆராய்ச்சியிலும் இந்த உண்மையைக் கண்டு வருகின்றனர். அப்படியிருக்க இம் மாபெரும் உலகமும் அதிலுள்ள அதிசயப் பொருள்களும் தாமாய், தற்செயலாய்த் தோன்றியன என்று எண்ணுவது எத்தனை வடிகட்டின அசட்டுத்தனம்! ருஷியாவிலிருந்து செயல் நிலா தானாய் இயங்கவில்லை. கோடிக்கணக்கில் செலவழித்து, அறிஞர் பல புத்தி நுட்பத்தைப் பயன்படுத்தி அதை வானவெளியில் விட்டனர். இயற்கை நிலாவும், வான்மீன்களும்

மண்டலங்களும் ஆக்கியோனில்லாமல் தோன்றியிருக்கக் கூடு மென்பது எத்துணை பேதமை!

“ வான் நிலையத்தில் தொலைகாண் கருவியால்
வான மண்டலங்களைக் காட்டினான் அறிஞன்.

‘ வான் உறை கடவுளைக் கருவியின் மூலம்
காட்டும் எனக்கு! இங்கு’ என்றான் நாத்திகன்.
கருவியை நாத்திகன் தலைநேர் பிடித்துக்
கூர்ந்து பார்த்தான் ஆராயும் அறிஞன்.

‘ யாது செய்கின்றீர் என் தலை மீது ? ’ எனக்
காரணமறிய வினவினான் நாத்திகன்.

‘ கடவுளைக் காண மூளை மிகத் தேவை ;
களிமண் இருப்பின் பயனேதுமில்லை
இருப்பது மண்ணோ மூளையோ எனத் துணிந்து
அறியவே அமைத்தேன் ! ’ என்றான் அறிஞன்.

(2) இவ்வுலகில் நாம் காணும் ஒழுங்கு நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. விண்ணில் எத்தனை விண்மீன்கள்! எத்துணை தொலையில் இருக்கின்றன! விஞ்ஞானத்திலிருந்து அவைகள் உலகைவிடப் பன்மடங்கு பெரிய உலகங்கள் என்று நாமறிவோம். அவைகள் எப்போதாவது வழிதவறி ஒன்றோடொன்று மோதிக்கொண்டனவா? மண்டலங்கள் சுற்றிவரும்போது பாதை தவறி இன்னொரு மண்டலத்தோடு இடித்துவிட்டனவா? அரசு வெகு கவலையோடு நகர் காப்பாளர்களை ஏற்படுத்தி ‘நில்’ ‘போ’ என்று போக்குவரத்தை ஒழுங்குபடுத்தியும், தினத்தாளில் நாம் அடிக்கடி விபத்துக்களைத்தான் வாசிக்கிறோம். ரயிலில் எத்தனை விபத்துக்கள்! வானில் அத்தகைய விபத்துக்கள் நேரிட்டதாக நாம் கேள்விப்பட்டதுண்டா?

புத்தியற்ற விலங்குகளில் உடல் அமைப்பிலும் சுபாவ நாட்டங்களிலும் எத்தனை ஒழுங்கு! மனிதன் உடலில் எத்தனை நரம்பு, செல்கள், எலும்புகள், சதை!

சடப் பொருட்களில் அணு, மைக்கிரோன், எலெக்ட்ரோன் என எத்துணை அதிசய ஒழுங்கு!

இந்த ஒழுங்கை அமைத்தவர் யார்? எங்கே ஒழுங்கு இருக்கிறதோ, அங்கே ஒழுங்கை நிறுவப் புத்தியுள்ள ஒரு பொருள் தேவை. இதை மறுப்பவர் ஒருவருமிலர். ஒழுங்கு தானாய் அமைந்துவிடாது. மாடுகள் வரிசையாய்ப் போகின்றன. கவனித்துப்பார். மாடுகளின் பக்கத்தில் மூன்றடிப் பையன் நான்கடிக் கோலைக் கையில் பிடித்துக்கொண்டு நடப்பான். ஒரு கடிகாரத்தில் பற்பல உருளைகள் இருக்கின்றன. எல்லாம் முறையாய் ஓடுகின்றன. கடிகாரம் காலத்தைச் சரியாய்க் காட்டுகிறது. இந்த உருளைகளையெல்லாம் ஓர் புத்தியுள்ளவன்தான் அமைத்திருக்க வேண்டுமென்று அனைவரும் ஒத்துக் கொள்வோம். என் கடிகாரத்திலுள்ள சக்கரங்களை எங்கள் நாய்க்குட்டி அமைத்தது என்று ராமசாமி சொல்லுவானேயாகில், அவனுக்கு என்ன பட்டம் கிடைக்கும்! கடிகாரம் சரிவர மணியைக் காட்டுவதுபோல், புத்தியில்லாத விலங்குகள் சுபாவ நாட்டங்களின்படி யந்திரங்கள்போல் அனைத்தையும் செய்துவருகின்றனவே. இந்தச் சுபாவ நாட்டங்களை அமைத்தவர் யார்? மண்ணிலும் விண்ணிலும் வியக்கத்தக்க முறையில் எல்லாம் ஒழுங்காய் நடந்து வருகின்றனவே. இவைகள் ஒரு குருட்டுச் சக்தியால் ஏற்பட்டன என்று சாதிப்பது சரியா?

ஆதலால் இவற்றிற்கெல்லாம் காரணம் ஒன்று தேவை. அக்காரணம் ஒரு புத்தியுள்ள பொருள். அப்பொருளையே கடவுள், தெய்வம், ஆண்டவன், சர்வேசுரன், ஈஸ்வரன் என்று அழைக்கிறோம்.

கடவுள் உண்டா?
கடவுளைக் கண்டவன் யார்?
கடவுளைக் கொண்டவன் யார்?
கடவுளை உணர்ந்தவன் யார்?

* * *

இது என்ன? இன்பமான ஓவியம்.
அது என்ன? அழகான கடிகாரம்.
இதை வரைந்தது யார்? இந்த வீட்டுப் பூனே.
அதைச் செய்தது யார்? அடுத்த வீட்டு ஆடு.
ஆடு கடிகாரம் செய்ய இயலாதே.
பூனே ஓவியம் வரைய முடியாதே.
புத்தியுள்ள ஆக்கியோன் ஒருவன் அவசியம்.
ஓவியம் தானுய் உருவாகாது.
கடிகாரம் தானுய் உண்டாகாது.
அபூர்வ ஓவியம்
அழகான கடிகாரம்
அகஸ்மாத்தாய் தோன்ருது.
ஏன்?
**காரணமில்லாமல் காரியமில்லே,**
**புத்தியில்லாமல் ஒழுங்கு யில்லே.**
**ஆக்கியோனில்லாமல் ஆனபொருளில்லே.**
புத்தியுள்ளவன் இல்லாமல்
கடிகாரமும் இல்லே;
ஓவியமும் இல்லே.

*　　*　　*

ஓவியம் தானுய்த் தோன்ருது என்கிறவன்
விண்ணும் மண்ணும் ஆக்குவோனின்றியே தோன்றின என்கின்ருன்!
ஒழுங்குக்கு அறிவு அவசியம் என்கிறவன்
ஒப்பில்லா உலகின் அமைப்பு,
குருட்டு சக்தியால் ஆனது என்கிருன்!
மனிதனில் மட்டுமே மடையனிருக்கக் கூடும்,
புத்தியை விற்றவனே கடவுள் இல்லே எனக் கூடும்.

*　　*　　*

3. கடவுள் பற்று மக்கள் நடுவில் எக்காலமும் இருந்து வந்திருக்கிறது. அறியாமையால் கடவுள் பலர் என்றார்கள்; குட்டித் தெய்வங்களை உருவாக்கினார்கள். உலகில் பிறப்புக்கு ஆண் பெண் உறவு தேவையென்று கண்ட மக்கள் உலகை உண்டாக்க ஆண் பெண் தேவை என்று கருதி ஆண் பெண் தெய்வங்களென்று தனிப்பட்ட சக்திகளைக் கற்பனை செய்தார்கள், ஆனால் நாகரிகமற்ற மக்களும் இறைப் பற்று இல்லாமல் இருந்ததில்லை; கடவுள் இல்லையென மறுத்த தில்லை. இது தான் பற்பல பண்டைய மக்களது வேதத்தை யும் வாழ்க்கையும் பண்பாடுகளையும் ஆராய்ந்து வந்த அறிஞர் கள் (anthropologists) கண்டறிந்த உண்மை. தமிழ் மக்களைச் சார்ந்த வரையில் நமது இலக்கியங்களே சான்று கூறும்.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு

எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதல் எழுத்தைக் கொண்டிருப்பது போல, உலகம் கடவுளையே முதலாகக் கொண்டிருக்கிறதென்று திருக்குறள் தொடக்கத்திலேயே திருவள்ளுவர் கூறியுள்ளார்.

கதிரவன் கிரணக் கையால்
கடவுளைத் தொழுவான்; புட்கள்
சுதி யொடு மாடிப் பாடித்
துதி செய்யும் ; தருக்களெல்லாம்
பொதி அலர் தூவிப் போற்றும் ;
பூதம் தம் தொழில் செய் தேத்தும்;
அதிர் கடலொலியால் வாழ்த்தும்;
அகமே ! நீ வாழ்த்தா தென்னே —

(வேதநாயகம் பிள்ளை)

சூரியன், பறவைகள், செடி கொடிகள், பூமி, கடல் அனைத்தும் கடவுளைத் துதிக்கும்போது, நீ மட்டும் அவரை வாழ்த்தாதது என்னே என்று கேட்கிறார்.

இங்ஙனம் உலகெங்கும் பரவி, எக்காலமும் இருந்து வந்திருக்கும் இக் கொள்கைக்கு ஒத்தது போல் ஒரு பரம் பொருள், கடவுள் இல்லையென்றால், மானிடரின் தனித் தத்துவமாகிய ஆறும் புலனெனப்படும் அறிவு எல்லா மக்களையும் எல்லாக் காலத்திலும் ஏமாற்றிவிட்டதென்று கூற வேண்டும். ஆனால் நமது அறிவு உண்மையை உணர்த்தக் கூடியது என்பதற்குக் கலைகளும், விஞ்ஞான வளர்ச்சியுமே போதிய சான்றுகள். ஆகவே, மானிட அறிவு சுட்டிக் காட்டும் கடவுள் உண்மையாகவே அறிவையும் இயற்கையையும் கடந்து நிற்கும் சுயம்பு; முழுமுதற் கடவுள்; பரம்பொருள்; ஈஸ்வரன்.

ஆங்கில அறிஞர் திரு. செஸ்டர்டன் என்பவர் சொல்லியிருப்பது போல,

எல்லா மக்களும் ஒரோர் சமயத்தில் ஏமாறக் கூடும் ;
ஒரு சில மக்கள் எல்லாச் சமயத்திலும் ஏமாறக் கூடும் ;
எல்லா மக்களும் எல்லாச் சமயத்திலும் ஏமாற முடியாது.

## கடவுளின் தன்மை

கடவுள் முதற் காரணம். அவர் எவராலும் உண்டாக்கப் படவில்லை. எவரிடத்திலும் உற்பத்தியாகவுமில்லை. எப்பொருளையும் தாம் இருப்பதற்குச் சார்ந்திருக்கவுமில்லை. அவர் தாமாய் இருக்கிறவர். சுயம்பு (self existent)

அவர் தமது இயல்பாயமைந்த தாமாய் இயங்கும் தன்மையுடையவர். அவர் முதற்காரண மானதால், அவருடைய பண்புகளை மற்றவரிடமிருந்து பெறவில்லை. அவரது பண்புகளுக்கு ஒரு அளவிடக் கூடியவரும் ஒருவருமில்லை. அவர் சுயம்பு. ஆனதால் சுபாவ இயல்பினால் அவர் எல்லா நன்மைத் தனத்தையும், அழகு, வலிமை, நீதி, அறிவு, இரக்கம், அன்பு முதலிய எல்லா நற்குணத்தையும் வரம்பில்லாமல் கொண்டிருக்கிறார்.

கடவுளுக்குப் பூதவுடல் இல்லை, பூத உடல் பங்கு பாகத்துக்குட்பட்ட சடப்பொருள். மாற்றம், மறைவு,குறைவு, வளர்ச்சி, நோய், என்பதெல்லாம் அதற்கு உண்டு; கனம், நீளம், அகலம் முதலியவையும் உண்டு. ஒரு இடத்தில் ஒரு சடப் பொருள் இருந்தால், அதே வேளையில் அது மற்றொரு இடத்தில் இருக்க இயலாது. நாம் பள்ளிக் கூடத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கும் போதே, ஹாக்கி பந்தய விளையாட்டைப் பார்க்கக் கூடுமா? ஆதலால் உடல் கொண்டிருப்பது ஒரு உயர்ந்த மேன்மையல்ல.

அது ஒரு குறைபாடு. ஆதலால் கடவுளுக்கு உடலில்லை. அவருக்குப் பங்குபாகமுள்ள உடல் இருக்கிறதென்று வைத்துக்கொள்வோமானல், இந்தப் பல பாகங்களை ஒன்றுபடுத்த ஒருவர் தேவையல்லவா? ஆனல் கடவுள்தான் முதற் காரணர், சுயம்பு என்று கண்டறிந்தோம். ஆதலால் கடவுள் ஒரு அரூபி; சித்து (Spiritual); பங்குபாகமற்றவர். அவர் சுபாவமும் அவரது பண்புகள் எல்லாம் ஒன்றே. அதனல் தான் அன்பே தெய்வம்; தெய்வமே அன்பு என்கின்றனர்.

இத்தகைய அளவில்லாத சித்து இருவர் இருக்க முடியுமா? ஒன்றே தவிர இரண்டு மூன்று இருக்கமுடியாது. கடவுளுக்குச் சரியொத்த வேறொரு வஸ்து இருந்தால், அவர் அந்த வஸ்துவுக்குக் காரணராய், கர்த்தனய் இருக்கமுடியாது. ஒருவரிடத்தில் இருக்கும் பண்பு மற்றவரிடத்தில் அதே அளவு இருக்க முடியாது. குறைபாடு ஏற்படும். குறைபாடுள்ள வஸ்து அளவில்லாத நற்குணங்களைக் கொண்டு தாமாய் இயங்கும் சுயம்பு என்று சொல்வதற்கில்லை. ஆதலால் தான் 'ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு' என்று பட்டினத்தார் பாடியுள்ளார்.

---




கடவுள் முதற் காரணர். ஒரே கடவுள்; சுயம்பு; சித்து. விண்ணும் மண்ணும், ஆணும் பெண்ணும், செடியும் கொடியும், பறவையும் விலங்கும் அனைத்தும் அவரால் சிருஷ்டிக்கப் பட்டு வந்திருக்கின்றன.

நாம் இவ்வுலகில் இருக்கிறோம். நமது வாழ்க்கையின் குறிக்கோள் என்ன? எதற்காக நாம் உயிர் வாழ்கிறோம்?

சிறு குழந்தைகள் கைக்கடிகாரம் கட்டியிருப்பதைக் கண்டிருக்கிறோம். அது மணி பார்ப்பதற்கா? அல்ல. அழகுக்கு. அதனால்தான் அக்கடிகாரம் எக்காலமும் 10 மணி காட்டினபோதிலும், அக்குழந்தைகள் கவலையுறுவதில்லை. அதற்கு மாறாக, ஆசிரியப் பெருமக்களும் மாணவ மாணவிகளும் கைக்கடிகாரம் கட்டிக்கொள்வதின் நோக்கமென்ன? அழகுக்காக இருக்கலாம். வீண் சிலாக்கியத்துக்காக இருக்கலாம். ஆனால் கடிகாரத்தின் முதல் நோக்கத்திற்காக, அதாவது மணி பார்ப்பதற்காக அவர்கள் கட்டியிருக்கிறார்கள்.

பெற்றோர்கள் ஒரு பையனை 'ஹாஸ்டலுக்கு' அனுப்பி வைக்கிறார்கள். அவர்கள் எக்கருத்துடன் பையனை அனுப்பி வைத்தார்களோ, அக்கருத்துக்கிணங்க அவர்கள் பையனின் வாழ்க்கையில் மாறுதலை எதிர்பார்க்கிறார்கள். அரிசிப் பங்கீடு காலத்தில் பையன் வயிற்றுக்கு வஞ்சகமில்லாமல் நன்றாய் உண்டால் போதும் என்று அவனைப் பெற்றோர் அனுப்பி

யிருந்தால், ஆண்டு முடிவில் அவர்கள் பையனிடம் எதிர் பார்ப்பது என்ன? படிப்பில் தேர்ச்சியா? அல்ல. பையன் நன்றாய்ப் பருத்து 'ரோடு ரோலர்' போலிருக்கிருனு என்பது தான். ஆனால் அவர்கள் பையனைப் படிக்க அனுப்பியிருக்க, அவன் தேர்ச்சி அடையாவிடில், அவர்கள் எவ்வளவு கலக்க முறுவார்கள்!

எனவே, ஒரு கடிகாரத்தின் கதி என்ன? மணி காட்டுவது. ஒரு கத்தியின் கதி? வெட்டுவது. மாணவனின் கதி? கற்பது. ஆசிரியரின் கதி? கற்பிப்பது. அப்படியானால் மனிதனின் கதி என்ன? கவனிப்போம்.

எல்லா மக்களும் எக்காலத்திலும் மகிழ்ச்சியையும் மன நிறைவையுமே நாடித் தேடியிருக்கிருர்கள். இந்த நாட்டம் நமது உள்ளத்தில் வெகு ஆழமாய் வேரூன்றி இருக்கிறது. இது ஒரு குறிப்பிட்ட வயதில் மட்டும் உதிக்கும் விருப்பமல்ல. நமது சுபாவத்தோடு சுபாவமாய் நம்மில் ஒட்டிக்கொண்டிருக்கிறது. சிறியோரும் பெரியோரும், அரசனும் ஆண்டியும், கற்றவரும் கல்லாதவரும், செல்வரும் ஏழைகளும் ஆண் பெண் இருபாலரும் இவ்விருப்பத்தை நிறைவு படுத்த வழிவகையைத் தேடுகிருர்கள். மனிதன் சொத்தைச் சேர்க்கிருன், நிலத்தை வாங்குகிருன், பதவிக்காகப் பாடுபடுகிருன். சிற்றின்பத்தில் உழல்கிருன். மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை இம் மூவித விருப்பங்களும் அவன் உள்ளத்தில் அமைதியை உண்டாக்கவில்லை. மகிழ்வைக் கொடுக்கவில்லை. அவன் இவ்வுலக சுகபோகங்களில் கலப்பில்லா இன்பத்தைக் காணுது கலங்குகிருன். அவன் உள்ளத்தில் ஒரு விதக் காலியிடம் தென்படுகிறது. ஏமாற்றமடைகிருன். எட்டா பழத்தைக் கண்டு கொட்டாவி விட்டவன் கதையாய் விரும்பி விரும்பி வாடுகிருன்.

மனிதனின் ஆன்மா சித்துப்பொருள், (அறிவுடைப் பொருள்); அளவில்லாப் பரம்பொருளில் தனது இன்பத்தையும் நிறைவையும் தேடி நாடுகிறது. மனிதனே அள

வுள்ள, அழிந்துபோகும், மாற்றமுள்ள, இன்பமும் துன்பமும் கலந்த ஓர் மகிழ்ச்சியால் தன் ஆன்மாவைச் சமாதானப்படுத்த முயற்சித்தால், வெற்றியடைவானா? ஆதலால் நாம் இவ்வுலகில் செய்யவேண்டிய தென்ன? நமது வாழ்வின் குறிக்கோள் என்ன? கடவுளின் திருவடிகளை அடைந்து, எக்காலமும் மகிழ்வுற்றிருப்பதற்காக, இவ்வுலகில் பயிற்சி பெறும் வண்ணம் வாழ்க்கை நாம் நடத்த வேண்டும். அதாவது இவ்வுலகில் கடவுளுக்கு அன்பு செய்து, பணியாற்றி, அவரை வழிபட்டு வர வேண்டும். ஒரே வார்த்தையில் கடவுளின் திருவுளப்படி நமது அன்றாட வாழ்க்கையை நடத்திச் செல்ல வேண்டும். அப்போது மறுவுலகில் முடிவில்லாப் பேற்றை அடைவோம்.

Conscience is the practical judgment about the goodness or badness of one's own personal action



# மனச்சான்று



நாம் கடவுளின் திருவடிகளை அடைந்து நித்தியானந்தத்தை அனுபவிப்பதற்காக இவ்வுலகில் இருக்கிறோம். அந்த முக்தியை அடையும் வண்ணம் அன்றாட வாழ்க்கையில் அவரது திருவுளப்படி நாம் நடக்கவேண்டும். அவ்விதம் நடக்கத் தவறும்போது, கடவுளுக்கு விரோதமாக பாவம் புரிகிறோம்.

அதற்கு நாம் செய்யவேண்டியதென்ன? கடவுளின் திருவுளத்தை அறிவது எங்ஙனம்?

**சொல், செயல், எண்ணங்கள், விருப்பங்கள் இவைகளில் தக்கதைச் செய்து, தகாததை விலக்கவேண்டும். அதாவது நமது மனச்சான்றின்படி நடக்கவேண்டும்.**

வீட்டில் பெற்றோர் இல்லை. சிறுவன் அறைக்குள் செல்கிறான், பலகாரமிருக்கிறது. எடுத்துண்ணப் போகிறான். 'எடுக்காதே; தாயாரிடம் கேட்டு எடு' என்று ஒரு குரலொலி உள்ளத்தில் ஒலிக்கிறது, திடுக்கிடுகிறான். ஒன்றும் அவனுக்குப் புரியவில்லை. தாய் வீடு திரும்புகிறாள். நடந்ததை அவளிடம் சொல்லுகிறான். அவள் சிறுவனை அன்புடன் அரவணைக்கிறாள். 'என் கண்ணே! மக்கள் அக்குரலை மனச்சான்றென்பார்கள். நானோ கடவுளின் குரல் என்று சொல்வேன். நீ என்றும் அக்குரலுக்கு செவிசாய்த்து நட. அப்போது நீ யாதொன்றுக்கும் அஞ்சவேண்டியதில்லை' என்கிறாள்.

ஆனதால் ஒரு நடுவர்போல் நம் உள்ளத்தில் அமர்ந்து, இது நல்லது, அது கெட்டது; இதைச் செய், அதைச் செய்யாதே என்று தூண்டி, நல்லதைச் செய்யும்போது மகிழ்ச்சியையும், தீயதைச் செய்யும்போது மனக் குத்தலையும் கொடுக்கும் நமது புத்தியே மனச்சான்று எனப்படும்.

மன்னும் மனச்சாட்சி மன்னவன் சொல் என்ன என
உன்னி நடத்தல் உயர்வு. (சுத்தானந்த பாரதி)

இவ்வழிச் செல் என்றென்று உள் எச்சரிக்கை செய்கின்ற(து)
அவ்வழியில் அச்சமறச் செல். (சுத்தானந்த பாரதி)

தக்க இன்ன தகாதன இன்ன என்று
ஒக்க உன்னல ராயின் உயர்ந்துள
மக்களும் விலங்கே ; மனுவின் நெறி
புக்கவேல் அவ்விலங்கும் புத்தேளிரே. (கம்பர்)

தக்கவை இவை, தகாதவை இவை — எனப் பொருத்தமாக எண்ணிச் செய்யாதவர்கள் மக்கட் பிறப்பினராயினும் விலங்குகளாவர். மக்கட்குரிய நன்னெறியைக் கடைப் பிடிக்கும விலங்குகளும தேவ மக்களே.

இம் மனச்சான்று சிலரிடத்தில் வெகு தெளிவாகவும், வேறு சிலரிடத்தில் வெகு மட்டமாகவுமிருக்கும். பயிற்சியே இவ் வேறுபாட்டுக்கு முக்கிய காரணம். ஒருவன் தன் மனச்சான்றின் குரலொலியை அடிக்கடி அசட்டை செய்து, தன் விருப்பத்தின் படியே நடந்து வருவானேயாகில், அவனது மனச்சான்று தன் நுட்பத்தை இழந்து விடுகிறது. அதன் கூர்மை மழுங்கிப் போகிறது என்னலாம். ஒரு வில்லின் விறைப்புத் தளர்ந்து விடுவதுபோல், அவனுடைய மனச்சான்றின் பண்பு குறைந்து விடுகிறது எனலாம். அதற்குமாறாக, அவன் என்றுமே தன் இச்சைக்கு இணங்காமல், தன் மனச்சான்றின் குரலுக்குச் செவி சாய்த்து வந்திருந்தால், அது கூர்மையடைகிறது, அதன் ஒலி தெளிவாயிருக்கிறது.

## 2. நன்மை தீமை

தக்கது எது, தகாதது எதுவென அறிவதெங்ஙனம் என்று ஓர் கேள்வி எழலாம். நாம் பகுத்தறிவுள்ள மக்கள். நமது ஆத்மீகத் தத்துவங்களைக் கடவுள் திருவுளப்படி பயன்படுத்துதலே முறை, ஒழுங்கு என்று நமது புத்தி சொல்லுகிறது. கடவுள் மட்டிலும், பிறர்மட்டிலுமு, நம் மட்டிலும் நியாயமாய் நடப்பதுதான் ஒழுங்கு. இவை தக்கது. இதற்குமாறாக நடப்பது தகாதது.

ஒருவன் தன் பாட்டி படுத்த படுக்கையில் துன்புறு வதைக் காண்கிறான். அவனால் பார்த்துச் சகிக்கக் கூட வில்லை. அவன் மனச்சான்று சொல்வதென்ன ? பாட்டியைப் பரம னிடம் அனுப்பி விடுவதே நலம் என்பதே. அவன் அதை நல்ல தொண்டாக எண்ணுகிறான். பாட்டியின் குரல்வளையை, அவள்பால் கொண்ட அன்பினால், நெறித்து அவளைச் சாகச் செய்கிறான். இது தன்னிலே தவறான செயலாயிருப்பினும் அவன் மனச்சான்றின்படி நற்செயலாக அதைக் கருதினான். ஆதலால் கடவுளுக்கு முன் அவன் குற்றவாளி யெனக் கருதப்பட மாட்டான். ஆனால் அறியாமையினால் இதைச் செய்தான். நல்ல புத்தகங்களைப் படித்து, கற்றாரோடு பழகி, நல்லறிவு பெற்று, தனது அறியாமையை நீக்க வேண்டும்.

அவன் ஒரு செயலைச் செய்யுமுன் தக்கதோ தகாததோ என ஐயப்பட்டால், விசாரித்தறிந்து, ஐயத்தை நீக்க வேண்டும்.

ஆனதால் ஒருவன் தன் மனச்சான்றின்படி நடந்து வந்தால், கடவுளுடைய விருப்பப்படி நடந்து வருகிறான் என்ற உள்ளுணர்வு கொள்ளலாம்.

தக்கதைச் செய்; தகாததை விலக்கு என்று சொல்லு கிறோம். இதில் ஒரு குறிப்பு தேவை. நல்லவைகளை, தக்கவை களை நாம் செய்ய வேண்டுமென்பது கடன். ஆனால் எல்லா நன்மையையும் ஒவ்வொரு கணத்திலும் செய்து கொண்டிருக்க முடியாது; தேவையுமல்ல. தர்மம் கொடுப்பது ஒரு நற் செயல். நாள் முழுதுமே நம்மிடம் வரும் ஒவ்வொரு ஏழைக்கும் தர்மம் கொடுத்துக் கட்டுமா ? கடவுளை வழிபடுதல் தலைசிறந்த செயல். நாள் முழுவதும் அலுவல்களை விட்டுவிட்டு கடவுளை வழிபட்டுக் கொண்டிருக்க முடியுமா ? கடமையா ? இல்லை.

அதற்கு மாறாக, தீமையை, தகாததை எப்பொழுதும், எவ்விடத்திலும் விலக்கக் கடமைப் பட்டிருக்கிறோம். கடவுளை நிந்திப்பது தகாதது. கெட்ட வார்த்தைகளைச் சொல்லுவது தகாதது. பொய்பேசுவது தகாதது. இவைகளை எப்போதும் நாம் விலக்க வேண்டும். ஓய்வு நேரம், கேளிக்கை நேரமென்று குறித்து, அந்நேரத்தில் தகாதவைகளைச் செய்ய லாம் என்று ஒருபோதும் எண்ணலாகாது.

புண்ணியம் ஆம் பாவம்போம் போனநாட் செய்தஅவை
மண்ணில் பிறந்தார்க்கு வைத்தபொருள் — எண்ணுங் கால்
ஈதொழிய வேறில்லை எச்சமயத் தோர் சொல்லுந்
தீது ஒழிய நன்மை செயல். (ஔவையார்)

புண்ணியத்தால் இன்பமும், பாவத்தால் துன்பமும், உண்டாவதால், பாவத்தையொழித்துப் புண்ணியத்தைச் செய்க.

நாத்திகர்

கடவுள் இல்லையென்று பல்லவி பாடுபவர்கள் சுயநலவாதிகள். தங்கள் சுகபோகத்துக்குக் கடவுள்பற்று முட்டுக்கட்டையாயிருக்குமென்று அஞ்சுகிறவர்கள். உலகில் உயர்வு தாழ்வு இருக்கிறது உண்மையே. நீதியும் அநீதியும் மலிந்து கிடக்கின்றன. துன்பமும் துயரமும் வறுமையும் எத்திக்கிலுமிருக்கின்றன. அவைகளுக்கு அவர்கள் விளக்கங் கூற முடியவில்லை. ஆதலால் குறுக்குவழியில் எல்லாச் சிக்கல்களையும் கடவுள் இல்லை யென்னும் ஒரே விடையால் தீர்த்துக் கட்டும் தீர சூரர்களாக முன் வருகின்றனர். இடிவிழுந்தால் மட்டும் ‘முருகா, முருகா’ என்பார்கள். தங்கள் குழந்தை சாகக்கிடந்தால், மனைவி நைவேத்தியம் செய்து பழம் காய்கறிகள் கடவுளுக்குப் படைக்க உடன்படுவார்கள்.

நமக்கு ஒரு காரியம் புரியாத ஒரே காரணத்தினால் அது இல்லை என்பது புத்தியா? நான் ஒரு தோசைக்கல்லை கிராமப்போன் பெட்டியில் வைக்கிறேன்; சாவி கொடுக்கிறேன். ஒரு பாட்டையும் காணோம். தோசைக்கல் போலிருக்கும் ஒரு தட்டை ரூபாய் கொடுத்து வாங்கி வந்து மாரிமுத்து வைக்கிறான்; ‘வாங்க மச்சான் வாங்க’ என்று பாடுகிறது. எப்படி? நமக்குப் புரிந்து விட்டதா? இல்லை. விஞ்ஞான ஆசிரியரைக் கேட்டோம். வெகு அழகாக விளக்கம் கொடுத்தார். இறுதிக் கட்டத்தில் எவ்விதம் ஒரு தட்டில் மனிதக் குரல் தங்கி, மறுபடியும் பிரதிபலிக்கிறது என்று வகுப்பிலுள்ள ஒருவருக்குமே புரியவில்லை. ஆகையால் மாணவர்களுடைய முடிவு என்ன? கிராமப்போன், இசைத் தட்டுகள் என்பதெல்லாம் பொய். அப்படி ஒன்றுங் கிடையாது என்பது உலகமறிந்தால் நமது வகுப்புமாணவர்களை

எத்தனை அசடுகளென்று பாராட்டும்! உலகில் அநேக காரியங்கள் நமக்கு விளங்க வில்லை என்னும் ஒரே காரணத்தினுல் கடவுளே இல்லையென்பது எத்தனை வியக்கத்தக்கது. வயிற்றில் வலியென்று மருத்துவரிடம் சென்ருல், வயிற்றில் ஊசி போடுவதற்குப் பதிலாக, கையில் போடுகிருர். வெறி நாய் தொடையில் சரியாய் பிடுங்கிவிட்டது. வயிற்றில் ஊசி போடுகிருர். எப்படி இந்த மருந்து உடல் நலத்துக்கு உதவுகிறது? வானொலி என்கிரேம். ஒலி அலைகள் பாய்கின்றன. அவைகளைத் தடுக்கிரேம். ரேடியோவில் பாட்டுக் கேட்கிறது என்று எளிதிற் சொல்லிவிடுகிரேம். நாம் அதை எவ்வாறு என்று கண்டுபிடிக்கிரேமா?

தமிழர் என்று நெஞ்சைத் தட்டும் ஆண் மகனும் பெண் மகளும் நாத்திகத்தை ஆதரிப்பது எங்ஙனம்? திருவள்ளுவர் தொடக்கத்திலேயே கடவுள் உண்டு என்று பாடி, முதல் பத்துக் குறள்களையும் கடவுள் வாழ்த்துக்குப் பயன்படுத்தியுள்ளார்.

**கற்றதனுல் ஆய பயன் என்கொல் வால் அறிவன்**
**நற்ருள் தொழார் எனின்.**

மெய்யறிவையுடைய கடவுளது திருவடிகளை வணங்காவிடின், நூல்களைக் கற்றவர்கட்கு அக்கல்வியால் பெரும் பயன் யாது என்று கேட்கிருர்.

உலகக் கிரமத்தைத் தெரிந்துகொள்ளக் கூடுமான அறிவு அவர்களுக்கு இருக்கையில், ஏன் அதிக எளிதாய் அதனுடைய ஆண்டவரைக் கண்டுகொள்ளவில்லை? (பைபிள்)

கடவுள் இல்லையென்று மறுக்கும் மெய்யான நாத்திகர்கள் நடுவில் அறநெறி மார்க்கம் இருக்க முடியாது. உண்மையான அறநெறி மார்க்கம் கடவுள் உண்டு, நல்லோருக்கு அவர் முக்தியளிப்பார், தீயோரைத் தண்டிப்பார் என்பதே. நாத்திகர்கள் கொள்கையின்படி கடவுளுக்கு இடமில்லையே. தக்கது, தகாதது என்னும் மொழிகளுக்கு என்ன பொருள்? அவர்கள் அறநெறி மார்க்கம் என்று சொல்லும்போது, தங்களுக்கு உலக நலனைப் பயக்கக்கூடியச் செய்கைகள், மற்றவர்கள் விருப்பப்படி நடந்துகொள்வதே. கடவுளை அடிப்படையாகக் கொண்ட உண்மையான அறநெறியல்ல.

# கடவுள் மட்டில்
# நமக்குள்ள
# கடமைகள்




1. மதம்:

அவன் யார்? ஆண்டிப்பட்டி ஆறுமுகம் மகன் அருணா.
இவள் யார்? முருகப்பட்டி முனியாண்டி மகள் மீனா.
அவன் குரலில் மயில்.
இவள் நிறத்தில் குயில்.
அவன் இவளைக் கண்டான்; மோகங்கொண்டான்.
இவள் அவனைக் கண்டாள்; காதல் கொண்டாள்.
ஓர் நன்னாளிலே அவள் கழுத்திலே திருமங்கலியம் ஏறினது.

இப்போது

அவன் யார்? மீனாவின் கணவன்.
இவள் யார்? அருணாவின் பத்தினி.

அவன்

இவளைத் தன் துணைவியாகக் கருதவேண்டும்;
இவளுக்கு உணவு, உடை, உறைவிடம் கொடுக்க வேண்டும்.
இவளோடு அன்புடன் வாழவேண்டும்.
அவனுக்கு உரிமைகளுமுண்டு, கடமைகளுமுண்டு.

இவள்

அவனுக்கு அன்பு செய்யவேண்டும்;
அவனது இல்லத் துணைவியாயிருக்கவேண்டும்;
அவனுக்குப் பணியாற்றவேண்டும்.
இவளுக்கு உரிமைகளுமுண்டு, கடமைகளுமுண்டு.

ஆண்டிப்பட்டி ஆண் மகனுக்கும்
முருகப்பட்டிப் பெண் மகளுக்கும்
கடமை, உரிமை வந்தது எங்ஙனம்?
அமைச்சர்கள் நிர்ணயித்ததாலா?
அந்தணர்கள் அர்ச்சனை செய்ததாலா?
பொதுமக்கள் திட்டம் வகுத்ததாலா?
அல்ல, அல்ல, அல்ல.
அவனுக்கும் இவளுக்கும் திருமணமாகிறது.
அவனுக்கும் இவளுக்கும் சம்பந்தம் உண்டாகிறது.
அவன் கணவன்; இவள் மனைவி.
அதேகணம் உரிமையும் கடமையும் தோன்றுகின்றன.

அஃதேபோல்

கடவுள் — மனிதன்;
சிருஷ்டிகர் — சிருஷ்டி;
படைத்தவர் — படைக்கப்பட்டவன்;
உண்டாக்கியவர் — உண்டாக்கப்பட்டவன்.
மனிதன் கடவுளை சார்ந்திருக்கிறான்.
தன் இறைவனென்று தலை வணங்குகிறான்;
தன் கர்த்தனென்று, தன்னை அர்ப்பணம் செய்கிறான்;
தன் உபகாரியென்று, நன்றி கூறுகிறான்.
தன் தந்தையென்று, அன்பு செய்கிறான்.

கடவுள்

மனிதனை உண்டாக்கினார்;
அவனைக் காத்தருள்கிறார்;
அவனில் அருள் பொழிகிறார்;
இவ்வுரிமைகளும் கடமைகளும் அமைந்துள்ளன.

**மதம்**

**கடவுள் வழிபாடு**

சமயம், மதம், வேதம், மறை
கடவுளுக்கும் மனிதனுக்குமுள்ள சம்பந்தம்.

அமைச்சர்கள் சட்டம் தீட்டினதாலல்ல.
அந்தணர்கள் மந்திரம் ஓதினதாலல்ல.
மக்களின் அறியாமையினுலல்ல.
மக்கள் மக்களாயிருந்தால் மதமுண்டு, அறமுண்டு.
மக்கள் மாக்களானல், மதமுமில்லே, அறமுமில்லே.
முதல் மனிதன் மண்ணில் தோன்றின நாளே
உலகில் மதம் தோன்றிற்று



காரணம் ?

மதம், வேதம், சமயம், மறை மார்க்கம்
அவருக்கும் அவனுக்குமுள்ள தொடர்பே.

மதம் உண்டு ;
மதம் அவசியம் ;
மதம் இயல்பு.

மனிதனின் மாயவலேயல்ல மதம்
மனிதனுக்கு மயக்க மருந்தல்ல மதம்.

நாம் கடவுளே வழிபடுவது நீதி, ஏனெனில் நமது முந்தையோர் கூறியிருப்பதுபோல் 'அவனன்றி அணுவும் அசையாது.' கடவுள் நமக்கு அவ்வளவு தேவை ; நாம் அவரை அவ்வளவு சார்ந்திருக்கிறோம்.



அலகு சால் கற்பின் அறிவு நூல் கல்லாது
உலக நூல் ஓதுவதெல்லாம் — கலகல,
கூஉம் துணே யல்லால் கொண்டு தடுமாற்றம்,
போ ஓம் துணே அறிவார் இல். (நாலடியார்)

அதாவது, கல்வியின் முடிவாக அமைந்துள்ள மெய்ஞ்ஞான நூல்களேக் கல்லாமல், உலகியல் நூல்களேக் கற்பதெல்லாம், பொருளற்ற கலகலப்பு ஒலி யளவாகுமேயன்றி, அவற்ருல் தம் தடுமாற்றத்தைப் போக்கும் நற்றுணேயாகிய அறிவைப் பெறுவார் ஒருவரும் இல்லே.

## 2. செபம்

கடவுள் வணக்கம். அதாவது அவர் மேல் நமக்குள்ள சார்பை மனப்பூர்வமாய் ஒத்துக்கொள்ள வேண்டும். அவர் தாமாயிருக்கும் சுயம்பு. நாம் அவரிடம் தொடர்பு கொண்டிருக்கும் படைப்பு. அவருக்குத் தாள் பணிகிறோம். அவரது திருவுள்ளப்படி வாழ்க்கையை அமைக்கிறோம். இதுதான் மெய்யான கடவுள் ஆராதனை ; வழிபாடு.

எனினும் செபித்தல், பஜனை செய்தல் முதலியவை அவசியமற்றவை என எண்ணலாகாது. அதற்காக நாம் ஒவ்வொருவரும் மணிக்கணக்காக உத்திராக்ஷம் உருட்ட வேண்டும்; திருவாசகம் பாட வேண்டும் ; திருப்பேரைப் பல்லாயிரம் முறை உச்சரிக்க வேண்டுமென்று கருதக்கூடாது. செபித்தல் என்பது நமது உள்ளத்தைக் கடவுள்பால் உயர்த்துவதுதான். இரு நண்பர்கள் உரையாடுகின்றனர்; தந்தையும் மகனும் பேசிக்கொள்கிறார்கள்; குற்றவாளி நீதிபதிமுன் மன்னிப்புக் கேட்கிறான். அதுபோல் சூழ்நிலைக்கும் நமது ஆன்ம தேவைக்கும் தக்கவாறு கடவுளிடம் மன்றாடுகிறோம்; அப்பனே தவறு செய்தேன், தண்டித்துவிடாதீர் - என்று மன்னிப்புக் கேட்கிறோம். இதுதான் செபித்தல்—கடவுளோடு உரையாடுதல்.

மனிதன் சமூகப் பிராணி. கூட்டு வாழ்க்கையில் ஈடுபடுகிறவன். ஆன்மா உடல் கொண்டவன். ஆகையால் அவன் தனிப்பட்ட விதமாய்க் கடவுளைத் தொழுவதோடு நின்றுவிடலாகாது. சமூகத்தோடும் சேர்ந்து கூட்டுவழிபாடும் செய்ய வேண்டும்.

கடவுளிடமிருந்து நாம் எத்தனை நன்மைகளைப் பெற்றிருக்கிறோம். இன்னும் பெறக் காத்திருக்கிறோம். அவைகளுக்காக நன்றி செலுத்துவது முறையல்லவா? "நன்றி மறப்பது நன்றன்று."

நமது இச்சைகளுக்கு இரையாகி நாம் அநேக வேளைகளில் கடவுளது திருவுள்ளத்தை அசட்டை செய்தோம். நமது விருப்பத்தை நாடினோம். தகாத செயல்களைச் செய்

தோம். தீயமொழிகளைப் பயன்படுத்தினோம். நம் கடமைகளில் தவறினோம். இத்தீவினைக்கு நாம் மெய்யான மனத்துக்கம் கொள்ளவேண்டும் ; கடவுளின் மன்னிப்பைக் கோரவேண்டும்.

நமக்கு எத்தனை தேவைகள்! நமது பெற்றோர், உறவினர், நண்பர்கள், ஆசிரியர்கள், இவர்களுக்காக இறைவனைப் பார்த்து நாளும் இறைஞ்சி மன்றாட வேண்டும்.

ஆகையால் நாளும் காலையிலும் மாலையிலும் கடவுளை நினைந்து, அவரை வழிபடுவோமானால், அவருடைய கருணை நம்மில் இருக்கும்; நம் குடும்பத்தில் இருக்கும்; நம் பள்ளியில் இருக்கும் ; நம் நாட்டிலும் நிறைந்திருக்கும்.

இருள் சேர் இரு வினையும் சேரா இறைவன்
பொருள் சேர் புகழ் புரிந்தார் மாட்டு.

இறைவனது கீர்த்தியை விரும்பினாரிடத்தில் மயக்கத்தைப்பற்றிய நல்வினை தீவினையென்னும் இரண்டு வினைகளும் உண்டாகா.

பொறி வாயில் ஐந்து அவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறி நின்றார் நீடு வாழ் வார்.

ஐந்து பொறிகளால் வரும் ஐந்து ஆசைகளையும் விட்டு விலகிய கடவுளது மெய்யான ஒழுக்க நெறியில் வழுவாது நிற்பவர் அழிவில்லாமல் வாழ்வார். ஆதலால் கடவுள் வழிபாட்டுடன் கூடிய நன்னெறியில் நிலைத்து நிற்க வேண்டும்.

## காலைப் பிரார்த்தனை

எல்லாம் வல்ல எம் தந்தையே! நானும் எனக்குரிய யாவும் உமக்கே சொந்தம். இதோ என்னை முழுவதும் உமக்கே கையளிக்கிறேன். என் சுய உரிமை, புத்தி, மனம் எல்லாவற்றையும் நீரே ஏற்றுக்கொள்ளும். என் சொல், செயல், எண்ணம் எல்லாம் உமது மகிமைக்கே. உமது அன்பையும் அருளையும் மட்டும் எனக்கு அளித்து, இன்று என்னை உமது அரவணைப்பில் காத்தருளும்.

நான் உம்மை அதிகமாய் அறியவேண்டும். நான் உம்மை ஆர்வத்தோடு நேசிக்கவேண்டும். நான் உமது விருப்பப்படி உம்மை வழிபட வேண்டும். இதுவே போதும் ; வேறெதுவும் எனக்கு வேண்டாம்.

விண்ணுலக எம் தந்தையே! உமது திருப்பெயர் போற்றப் பெறுவதாக. உமது அரசு வருக. உமது திருவுள்ளம் விண்ணுலகில் செய்யப்படுவதுபோல் மண்ணுலகிலும் ஆவதாக!

எமது அன்றாட உணவை எமக்கு இன்று அளித்தருளும். எங்களுக்குக் குற்றம் செய்தவர்களை நாங்கள் மன்னிப்பதுபோல் உமக்குக் குற்றம் செய்த எங்களை சோதனையில் விடாமல் தீமையிலிருந்து எங்களை மீட்டு அருள்புரியும் அப்பனே!

இறைவா!

*எனக்கு இன்று வாழ்வருளும்!*
*என் குடும்பத்திற்கு ஆசீர் அருளும்!*
*என் பெற்றோர்க்கு நலம் அருளும்!*
*என் நாட்டுக்கு வளம் அருளும்!*
*என் உழைப்புக்கு ஊதியம் அருளும்!*

## மாலைப் பிரார்த்தனை

அன்பே உருவான கடவுளே! இன்று நீர் எனக்கு அளித்த நன்கொடைகளுக்கு நன்றி செலுத்துகிறேன். உமது திருவுளத்துக்கு மாறாக ஏதாவது நான் செய்திருந்தால், என் குற்றத்தை உணர்ந்து துக்கிக்க உமது அருளைத் தாரும்.

ஆராய்வு:

1. *இன்று கடவுளை வழிபட்டேனா?*
2. *மனச்சான்றுக்கு மாறாக நடந்தேனா?*
3. *சொல், செயல், சிந்தனை, வாழ்க்கை — இவைகளில் நேர்மையுண்டா? தூய்மையுண்டா?*
4. *பிறர் பணியில் பொறுமை உண்டா? பிறருக்கு உதவி செய்தேனா? பிறர் பெயருக்கும் பொருளுக்கும் கேடு இழைத்தேனா?*

என் நல்ல தந்தையே! நான் என் குற்றங்களை நினைத்து, மனம் துக்கிக்கிறேன். இவ்வளவு அன்பும் அருளும் பொங்கும் உமக்கு வருத்தத்தைக் கொடுத்ததை எண்ணி மனம் உருகுகிறேன். இனி நான் உமது திருவுள்ளத்தின்படி நடப்பேன். உமது அன்பையும் அருளையும் தந்து, இன்றிரவு உமது அரவணைப்பில் என்னைக் காத்தருளும்.

இறைவா! நான் உம்மை அதிகமாய் அறியவேண்டும்; உம்மை ஆர்வத்தோடு நேசிக்கவேண்டும்; உமது திருவுள்ளப்படி உம்மை வழிபடவேண்டும். இதுவே போதும்; வேறெதுவும் வேண்டாம்.



# ஒவ்வொருவருக்கும்
# உள்ள
# கடமைகள்



# உயிர்

இறைவன் நமக்குக் கொடுத்திருக்கும் தத்துவங்களை முறையோடு பயன்படுத்த வேண்டும். இயற்கைக்கு மாருக யாதொன்றும் செய்வது தவறு. நமது ஆன்மாவுக்கும் உடலுக்கும் சேதம் விளைவிக்கும் எதையும் அயராது விலக்கவேண்டும். இல்லாவிடில், நமது இயற்கைச் சுபாவத்துக்கு நாமே கேடு வருவிக்கிறவர்களாவோம்.

உயிருக்குக் கருத்தன் கடவுள் ; நாமல்ல. அவரது திருவுளப்படி அதைக் காத்துப் பயன்படுத்த உரிமை நமக்குண்டு. தனது விருப்பப்படி ஒருவனுக்குப் பிறன் உயிரைப் போக்கவோ, தனது உயிரைப் போக்கிக்கொள்ளவோ யாதொரு உரிமையுங் கிடையாது. அப்படி நாம் பிறர் கொலையிலோ, தற்கொலையிலோ ஈடுபடும்போது, இறைவனுக்கே உரிய ஓர் முக்கிய உரிமையை நாம் கைக்கொள்கிறோம். இது மிகவும் தவருன செயல். கொலை எப்போதுமே பாவச் செயல் ; தீய செயல்.

(1) **பிறர் கொலை :** கடவுள் உயிரின் கர்த்தர். ஆதலால் தனிப்பட்ட எந்த மனிதனுக்கும் மற்றவர்களுடைய உயிர்மேல் எவ்வித உரிமையுங் கிடையாது. ஆனால் சமூகத்துக்குக் கேடு வருவிக்கும் ஒருவனை நியாயமாய்த் தண்டிக்கவும், தேவையானல் உயிர்த் தண்டனை விதிக்கவும் நியாயமாய் உருவான அரசுக்குக் கடவுள் அந்த அதிகாரத்தைக் கொடுத்திருக்கிருர். அரசியலார் பார்த்து சமூகத்தின் நலனைக் கவனித்து, அதற்குக் கேடு வருவிப்போரைத் தூக்கிலிடலாம், நீதியோடு.

நம் நாட்டில் கணவன் தன் மனைவிமேல் தனக்கு எல்லா அதிகாரமும் இருக்கிறதாக எண்ணுகிறான். இது தவறு. அவள் நடத்தையில் கொஞ்சம் ஐயம் ஏற்பட்டாலும், உடனே அவளைக் கொலை செய்கிறான். இது தினத்தாளில் அடிக்கடி வரும் செய்தி! இத்தகைய கொலை எப்போதுமே கடவுளுக்கு அடுக்காத செயல். பாவம்.

ஒருவன் தனக்கு அவமானத்தை வருவித்துவிட்டான்; தன் சொத்தை அபகரித்துவிட்டான் என்று அவனைக் கொலை செய்வதும் தவறு. சமூகத்திற்குத் தீங்கு விளைவிப்பவனை யும் தனிப்பட்ட ஒரு மனிதன் தன் அதிகாரத்தில் கொல்லக் கூடாது. அப்படி அவன் கொன்றால், கடவுளுக்குள்ள உரிமையை அபகரித்தவனாவான்.

**கொலைவினையர் ஆகிய மாக்கள் புலைவினையர்**
**புன்மை தெரிவார் அகத்து.**

கொலை செய்பவர்கள் மற்றவர்களுக்கு மிகவும் இழி தொழிலாராய்த் தோன்றுவர் என்று திருவள்ளுவர் கூறுகிறார்.

**நல்லா(று) எனப்படுவ(து) யாதெனின் யாதொன்றுங்**
**கொல்லாமை சூழும் நெறி,**

முக்தியடைவதற்கு நல்வழியென்று சொல்லப்படுவது எதுவென்றால் கொல்லாமையாகிய அறத்தைக் காக்க நினைக்கும் வழியாம்.

**அறவினை யாதெனில் கொல்லாமை; கோறல்**
**பிறவினை எல்லாம் தரும்.**

அறங்களெல்லாமாகிய செயல் யாது எனின் கொல்லாமையே. கொல்லுதலோ எல்லாப் பாவச் செய்கைகளையும் தானே தரும்.

(2) **தற்கொலை:** ஒருவன் தன் உயிரை மாய்த்துக் கொள்வதே தற்கொலை. உயிரைப் போக்கிக்கொள்ளும்

நோக்கத்தோடு தற்கொலை செய்தல், நேரடியான தற்கொலை எனப்படும். கணவனோடு கோபித்துக்கொண்டு குளத்தில் விழும் பெண்கள்; உடைந்த உள்ளத்துடன் மரத்தில் தன்னைத் தானே தூக்கிக்கொள்ளும் வாலிபன்; நோயின் வேதனை தாங்கமாட்டாமல் நஞ்சை உண்ணும் நோயாளி இதைப் போன்ற நேரடியான தற்கொலை என்றுமே பாவச்செயல். மனிதன் தன் உயிரின் கருத்தன் அல்ல. கடவுளே கருத்தன். மேலும் தற்கொலையால் மனிதன் தன் குடும்பத்துக்குப் பழிச் சொல்லையும் இழிவையும் ஆக்கிவிடுகிறான்.

ஒருவன் தன் உயிரை மாய்த்துக்கொள்ளும் கருத்தோடல்ல; ஆனால் அவன் பணியில் விபத்துக்கள் இருக்கின்றன என்று அறிந்தும் பிறர் பணியில் ஈடுபடுகிறான். எரியும் வீட்டில் உறங்கும் குழந்தையைக் காப்பாற்ற உள்ளே செல்கிறான்; காலரா நடக்கும் இடங்களில் தொண்டாற்றுகிறான். அச்சமயங்களில் அவன் உயிரை இழக்க நேரிட்டால் அது தற்கொலையல்ல.

தற்கொலை கோழையின் செயல். துன்பத்தையோ அபகீர்த்தியையோ, பொருட் சேதத்தையோ, ஒரு தோல்வியையோ, நீடிய நோயையோ தாங்க வலிமையற்றவர்கள் தங்கள் உயிரை மாய்த்துக்கொள்கின்றனர். கடவுள்பால் நம்பிக்கையற்றவர்களும் இவ்விதமே நடப்பார்கள்.

## குறிப்பு

1. சமூகத்துக்குப் பயனற்ற கூனர், குருடர், நோய்வாய்ப் பட்டவர்கள் இவர்களைக் கொன்று ஒழிக்கலாமா; சமூகம் சீராகுமே என்பர் சிலர். நமது பகுத்தறிவு சொல்வது என்ன? அவர்களும் கடவுளின் படைப்புக்கள். அவர்கள் சமூகத்தூத் தண்டனைக்கு உரிய கொலைபாதகம் ஒன்றும் செய்யவில்லை. அநீதி புரியும் அயோக்கியரில்லை. ஆகையால் அவர்களைக் கொல்வது மெய்யான கொலையாகும்; கடவுளுக்குப் பொருந்தாத முறைகேடான பாவச் செயலாகும். ஒரு நன்மை செய்வதற்காகத் தீய செயலைச் செய்யவே கூடாது. எளியவர்களுக்கு உதவி செய்ய வேண்டு

மென்னும் நல்ல எண்ணத்தோடு பணத்தைக் களவு செய்யலாமா? அதுபோல் துன்பத்திலிருந்து வேதனையிலிருந்து ஒரு நோயாளியைக் காப்பாற்றுவதற்காக அவனைக் கொன்றே போடலாகாது.

2. வயிற்றிலிருக்கும் கருவை வேணுமென்று சேதப்படுத்துவது கொலை.

3. போர், உள்நாட்டுக் கலகங்களில் கலந்து கொண்டு பிறரைக் காயப்படுத்துவது, கொலை செய்வது சரியா? நியாயமான போராயிருந்தால், நாம் போரில் கொல்வது காயப் படுத்துவது தவறல்ல. உள்நாட்டுக் குழப்பம்.—மெய்யாகவே ஒரு நல்ல காரணமிருந்து, வேறே எந்த முறையிலும் சமாதானத்தை நிலை நிறுத்த முடியவில்லை யென்று கண்டால், உள்நாட்டுக் குழப்பத்தில் கலந்து கொள்ளலாம்.

4. மடத் துணிச்சலாய்க் கார் ஓட்டுதலால் உயிருக்குச் சேதம் விளைவித்தால் ஓட்டுபவன் அந்த உயிர்ச் சேதத்துக்குப் பொறுப்பாளியாகிறான்; குற்றவாளியாகிறான். எப்போதும் கவனத்துடன் சட்டதிட்டத்துக்கு அமைந்த வேகத்தில் காரை ஓட்ட வேண்டும். பள்ளிப் பிள்ளைகள் பலர் கண்மூடி வேகமாய்ச் சைக்கிளை மக்கட் கூட்டம் நடமாடும் தெருக்களிலும் ஓட்டுவார்கள். இது தவறு.






## 1. உடல் நலம்

நமக்கு நமது தந்தை ஓர் அழகான விலையுயர்ந்த தங்கக் கடிகாரம் கொடுத்தால், அதை நாம் எவ்வளவு கருத்தோடு பாதுகாப்போம். நமது உடல் அந்தத் தங்கக் கடிகாரத்தை விட மேலானதல்லவா ? அதை நாம் வெகு கவலையோடு காப்பாற்ற வேண்டும். கடிகாரம் கெட்டுப் போனால், பழுது பார்த்துக் கொள்ளலாம் ; அல்லது வேறொன்று விலைக்கு வாங்கிக் கொள்ளலாம், நம் உடல் நலம் குன்றுவதற்கு நாம் காரணமாயிருந்தால், என்ன விலை கொடுத்தாலும் வேறு உடல் பெற முடியுமோ ?

உடல் நலம் ஓர் பெரிய பாக்கியம். 'நோயற்ற வாழ்வே, குறையற்ற செல்வம்.' நாம் உடல் நலத்துக்குக் கேடு வருவிக்கக் கூடிய அனைத்தையும் அகற்ற வேண்டும். நமது சக்திக்கு மேல் பட்ட வேலை ஆகாது. ஆண்டு முழுவதும் ஊரைச் சுற்றி விட்டு, தேர்வுக்கு ஒரு வாரத்துக்கு முன் இராப் பகலாய்ப் படிக்கும் மாணவனின் உடல் நலம் எவ்விதம் பாதிக்கப்படுகிறது ! உடல் வலிமைக்கு வேண்டிய உணவும் உண்ண வேண்டும். வறட்டுக் கௌரவத்துக்காக, நாலு பேர் மெச்ச வேண்டுமென்று அரை வயிற்று உணவே எடுத்து உடல் நலத்தைக் குறைத்துக் கொள்வது மதியற்ற செயல்.

ஒருவன் தன் உறுப்புக்களை வெட்டி எடுப்பது கிரமமற்ற பாவச் செயல். உடலுக்கும் உயிருக்கும் கர்த்தன் இறைவனே என்னும் உண்மையை நாம் ஒரு போதும் மறக்கலாகாது. சிலர் பிச்சை எடுத்துப் பிழைப்பதற்காக, பிறருடைய இரக்கத்தைப் பெறுவதற்காக, கையை, காலை, கண்ணை

வேண்டுமென்று பழுது படுத்திக் கொள்கிறார்கள். இதெல்லாம் கடவுள் திருவுளத்துக்கு மாறான செயலேயாகும். அது போல் தான் ஆண் பெண்கள் தங்கள் உயிர்ச் சக்தியை எடுத்து மலடாக்கிக் கொள்வது, மிகவும் அக்கிரமமான பாவச் செயலேயாகும்.

ஆனால் நமது உடல் நலனுக்காக புண்ணுற்றுப் புரையோடிய கையை வெட்டி எறிவதில் யாதொரு தவறுமில்லை. ஏனென்றால் கடவுளின் சொத்தாகிய உடலையும் உயிரையும் காப்பாற்றும் வண்ணம் நாம் ஒரு பாகத்தை வெட்டுகிறோம். அது போலவே நோயால் பாதிக்கப்பட்ட உறுப்பை எடுத்ததினால், ஒருத்தி மலடானால், அது தவறில்லை.

நாம் நம்மையே அங்கக் குறைவுள்ளவர்களாக்கிக் கொள்ளாதது மட்டும் போதாது ; நமது உடல் நலத்தைப் பேணவும் வேண்டும். இதுவும் நமது கடமை.

## 2. உடல் சுத்தம்

அதிகாலையில் பல் விளக்கி, கைகால் முகம் இவைகளைக் கழுவ ஒரு நாளும் தவறக் கூடாது. இரவில் படுக்கப் போகு முன் வாயை நன்றாய்க் கொப்பளிப்பது மிகவும் முக்கியம். ஏனெனில் உணவுப் பொருட்கள் பற்களுக்கிடுக்கில் மறைந்திருந்து நோயை உண்டாக்கலாம். வாயைக் கொப்பளிக்கும் போது அபாயச் சங்கு ஊதுவது போல் ஓசை உண்டாகுமாறு கொப்பளிக்கக் கூடாது.

வாய்ப்பிருந்தால் தினமும் காலையில் குளிப்பது நல்லது. வாரம் ஒரு முறையாகிலும் நம் நாட்டு வழக்கப்படி எண்ணெய் தேய்த்துக் குளிக்க வேண்டும். “ வைத்தியனுக்குக் கொடுக்கும் காசை வாணியனுக்குக் கொடு ” என்பது உண்மையே.

குளிக்கும் போது தண்ணீரை வீணாக்கக் கூடாது. எத்தனை மக்கள் தண்ணீர் இல்லாமல் வெகு தொலைக்குச் சென்று சிரமத்தோடு எடுத்து வருகிறார்கள். குளிக்கும் போது,

அழுக்குப் போக, வியர்வை நாற்றம் போக நன்ருய்த் தேய்த்துக் குளிக்க வேண்டும். பலர் சேர்ந்து குளிக்கும் போது தண்ணீரை ஒருவர் மேல் ஒருவர் அடித்து விளையாடுவது போன்ற செயல்களை அகற்ற வேண்டும். ஆற்றில் குளித்தால் வெகு கவனமாயிருக்க வேண்டும். விளையாட்டுப் புத்தியாய், ஆழமறியாமல் பள்ளத்தாக்கான இடங்களில் அகப்பட்டுக் கொள்ளலாகாது. குளித்த பின், உடலை ஓர் துவாலையினுல் துவட்ட வேண்டும்; குறிப்பாகத் தலையை நன்ருய்த் துவட்ட வேண்டும். தலை முடியை அழகாக வாரி யெடுப்பதற்காகவே சிலர் பாதி ஈரத்தோடு தலையைச் சீவுவார்கள். அதனுல் அடிக்கடி ஜலதோஷம், தலைப்பாரம் முதலிய நோய்களால் அவதியுறுவார்கள்.

### 3. சுத்தக் காற்று

உண்ணுவிரதம் செய்கிறவர்கள் பல நாட்கள் உண்ணுமல் இருக்கக் கூடும். ஆனுல் காற்றைச் சுவாசியாமல் உயிர் வாழ்வது அரிது. உலகிற்கு வரும் போதே சிசு முதல் மூச்சுடன் வருகிறது. மனிதன் உலகை விட்டுப் போகும் போது கடைசி மூச்சு விடுகிருன். காற்று நமக்கு சுவாசிக்க மிகவும் தேவை. அது சுத்தக் காற்ருக இருத்தல் வேண்டும். அசுத்தக் காற்றை நாம் சுவாசித்தால் பல நோய்களுக்குத்தான் ஆளாவோம்.

பொதுவாக வாயினுல் மூச்சு விடக் கூடாது; நாசியினுல் சுவாசிக்கப் பழக வேண்டும். பள்ளியிலோ, வீட்டிலோ, படிக்கும் இடத்திலோ, எங்கே உட்கார்ந்த போதிலும் நிமிர்ந்து உட்கார வேண்டும். முதுகெலும்பு ஒடிந்தவர்கள் போலவும், கேள்விக் குறிகள் போலவும் சாய்ந்து கொண்டு உட்காருவதால் போதிய காற்று நமது உடலுக்குள் செல்வதில்லை.

கூடுமான மட்டும் அறையின் ஜன்னல்கள் திறந்திருக்க வேண்டும். சிலர் இரவில் அறை ஜன்னல்கள் அத்தனையையும் அடைத்துக் கொண்டு தூங்குவார்கள். அதிலும் குளிர் கால மென்ருல் சொல்ல வேண்டியதில்லை. ஜன்னல்கள்

அடைத்ததோடல்லாமல் போர்வையால் மூக்கு வாய் முகம் அனைத்தையும் மூடியும் கொள்வார்கள். இது சுகாதாரத் துக்கு எவ்வளவு கேடு விளைப்பதென்று சொல்லத் தேவை யில்லை. நமது வீடுகள் பெரும்பாலும் சிறியவை; ஜன்னல் களும் சிறியவை. அவைகளை அடைத்து 'லொட்டு லொசுக்கு' 'தட்டு முட்டு' எல்லாம் வைத்திருப்பார்கள். அச்சன்னல்களைத் திறப்பதே கூடாத காரியம். இதை நாம் வீட்டில் சொல்லித் தடுக்க வேண்டும். என்ன குளிர் காலமாயிருந்த போதிலும் சில ஜன்னல்களையாவது திறந்து வைக்க வேண்டும். வட காற்று அடிக்கும் காலத்தில் வடபக்கத்து ஜன்னல்களை மூடி விடுவது தான் நல்லது. ஆனால் மற்ற ஜன்னல்களை மூடத் தேவையில்லை. சிலர் ஜன்னல்களையும் அடைத்து அறையில் கணப்புச் சட்டியும் வைத்திருப்பார்கள். இது வெகு கெடுதி.

### 4. சுத்தத் தண்ணீர்

தாயைப் பழித்தாலும் தண்ணீரைப் பழிக்காதே என்பர். அதற்கென்று எந்தத் தண்ணீரையும் குடிக்கலாம், எப்போதும் குடிக்கலாமென்று எண்ணுவது தவறு. சுத்தக் காற்று எத் துணை முக்கியமோ, அத்துணை முக்கியம் சுத்தத் தண்ணீர். சில கிராமங்களில் குளத்துத் தண்ணீர்தான் மனிதன் குடிக்கவும், குளிக்கவும், மாடுகளைத் தேய்த்துக் கழுவவும் பயன்படுத்தப் படுகிறது. இவ்விஷயத்தில் ஊரார் கடும் நிபந்தனைகளை விதித்து குளத்துத் தண்ணீரைச் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். குடி தண்ணீர் அசுத்தப் பட்டால், நோய் ஊரெல் லாம் பரவும்.

அப்படிக் கலங்கிய தண்ணீராயிருந்தால், சிரமத்தைக் கவனியாது தண்ணீரைக் கொதிக்க வைத்து, ஆறவைத்த பின் குடிக்க வேண்டும். இப்படிக் கொதிக்க வைப்பதால் நோய்க் கிருமிகளெல்லாம் செத்துப் போகின்றன.

### 5. உணவு :

நாம் உடல் நலத்தோடும் வலிமையோடும் இருக்கவேண்டு மானால், நன்றாய் உண்ண வேண்டும். வளர்கிற பிள்ளைகள் சத்துள்ள உணவைச் சாப்பிட வேண்டும்.

சிலர் எவரெஸ்ட் மலை உச்சிபோல் சாதத்தைக் குவித்துக் கொண்டு, கண் மூடிக் கண் திறப்பதற்குள், அடிவாரமே மறைந்து போகுமளவுக்கு ஒரு சோறு இல்லாமல் தவிடு பொடியாக்கிவிடுவார்கள். இது சுகாதாரத்துக்கும் ஏற்றதன்று, நல்லொழுக்கத்திற்கும் தகுந்ததன்று. நாம் பல ஆண்டுகளாகவே அரிசிச் சாதம் சாப்பிட்டே பழகியுள்ளோம். அதை விட்டுவிடுதல் வெகு கடினமாயிருக்கிறது. அரிசி சாதத்தில் அதிக சக்தியில்லை. நன்றாகத் தீட்டிவிடுவது ஒரு குறை. மேலும் நாகரீக முறைப்படி, சத்துள்ள கஞ்சியையும் வடித்து எடுத்து விடுகிறோம். ஆதலால் அரிசிச் சாதம் வயிற்றை நிரப்புகிறதே தவிர, நமது உடலுக்குப் போதிய வலிமையைத் தருவதில்லை. கோதுமை, கம்பு, சோளம், இதுபோன்ற தானியவகைகள் மிகச்சிறந்தவை. ஆனால் சில பிள்ளைகள் கம்பஞ் சோறு சாப்பிடுவது, கேப்பைக் கூழ் குடிப்பதெல்லாம் அநாகரீகம், கௌரவக் குறைவு என்று எண்ணுகிறார்கள். உண்ண வெட்கப்படுகிறார்கள். இது அறியாத்தனம். மிகவும் நாகரிகம் பெற்ற ஐரோப்பியர்களும் அமெரிக்கர்களும் 'பார்லியைக்'க் காய்ச்சி, பால் ஊற்றி, சர்க்கரை அல்லது உப்பு போட்டு சாப்பிடுகிறார்களே, அது என்ன? நோய்வாய்ப்பட்டிருக்கும்போது நமக்குக் கொடுக்கிறார்களே. தமிழ் மொழியில் 'பார்லி கூழ்' என்போம்; ஆங்கிலத்தில் 'பாரிஜ்' என்கிறார்கள். ஆதலால் கூழ் சாப்பிடுவதில் வெட்கப்படுவதற்கு ஒன்றுமில்லை.

பால் மிகவும் நல்லது. புலாலை முக்கிய உணவாகக் கொள்ளாத மக்கள் ஒவ்வொருவரும் தினமும் பதினாறு அவுன்ஸ் பாலாகிலும் சாப்பிட வேண்டுமென்று சுகாதார முறையில் மதிப்பிட்டிருக்கிறார்கள். நம் முன்னோர்கள் பாலையே முக்கிய உணவாகக் கருதினார்கள். நம் நாடு இன்னும் வளம் பெறவில்லை. மக்கள் இன்னும் வறுமையிலிருப்பதால் அவ்வளவு பால் வாங்கி நாம் குடிக்க இயலாது. ஆனால் வாய்ப்புக் கிடைக்கும்போது, பால், மோர் இவைகளை அதிகமாய்ப் பயன்படுத்த வேண்டும்.

பழவகைகள் உடம்புக்கு நல்லவை. கீரைகள் காய்கள் இவை அதிகமாய் உணவில் சேரவேண்டும். ஆனால் நமது பிள்ளைகள் வரட்டுக்காய்களையும் அழுகின பழங்களையும் சாப்பிட்டு வயிற்றை கெடுத்துக் கொள்வார்கள்.

தித்திப்பான பலகாரங்களை அதிகமாய்ச் சாப்பிடுவதும் நல்லதல்ல; அதிக உறைப்பானவைகளை உண்பதும் நல்லதல்ல. ஆனால் குழம்பிலும் கூட்டிலும் உச்சிமுடியை உந்தியிழுக்குமளவுக்குக் காரத்தை ஏற்றுவது நமது வழக்கம்! இவ்வளவு உறைப்பு வயிற்றுக்குக் கெடுதி. வயிற்றுப் புண் வருவதற்கு உறைப்புத்தான் காரணம் என்கின்றனர்.

அடிக்கடி சாப்பிட்டுக் கொண்டு இருப்பதும் கூடாது. சிலர் நெல் அரைக்கும் யந்திரம் போல் எப்போதும் எதையாகிலும் அரைத்துக்கொண்டே இருப்பார்கள். ஒன்றும் கிட்டாவிட்டால், கையிலிருக்கும் பென்சில்களை அல்லது கடவுள் கொடுத்த கைவிரல் நகங்களைக் கடித்து மிக உற்சாகத்தோடும் ரசிப்போடும் சுவைப்பார்கள். என்ன அநாகரிகம்!

**மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது**
**அற்றது போற்றி உணின்.**

முன் உண்டது சீரணித்துவிட்டதா என்று அறிந்த பின்னர் ஒருவன் உண்பானாயின், உடம்புக்கு மருந்தே தேவையில்லை என்கிறார்.

**அற்றால் அளவறிந் (து) உண்க அஃது (உ) டம்பு**
**பெற்றான் நெடிது (உ) ய்க்கும் ஆறு.**

சாப்பிட்ட உணவு சீரணித்தால், பின் உண்ணப்போகும் உணவை அளவு அறிந்து சாப்பிட வேண்டும். இப்படி நடப்பது உடம்பை நெடுங்காலம் பாதுகாத்துக் கொள்ளும் நெறியாம்.

**தீயளவு அன்றித் தெரியான் பெரிது (உ) ண்ணின்**
**நோய் அளவின்றிப் படும்.**

தன் சீரண சக்திக்கு மிஞ்சி அதிக உணவை உண்டால் நோய்கள் அளவில்லாமல் வளரும்.

**இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபேர் இரையான் கண் நோய்.**

உணவின் குறைந்த அளவை அறிந்து உண்பவனிடம் இன்பம் என்றும் நிலைக்கும். மிகப் பெரிய இரையைச் சாப்பிடுபவனிடம் இன்பமல்ல, நோய் என்றும் நிலைத்து நிற்கும். திருவள்ளுவர் ' இரை ' என்பது குறிப்பிடத்தக்கது.

## குறிப்பு

நல்ல பண்பாடுள்ள பிள்ளைகளை அவர்கள் உண்ணும் முறையிலிருந்தே அறிந்துகொள்ளலாம் என்பர் பெரியோர்.

1. சாப்பிடப் போகுமுன் கைகளைச் சுத்தமாய்க் கழுவுவது போதாது. கால்களில் தண்ணீர் துளிகள் விழுந்து, சொட்டை விழுந்தவைபோல் தோற்றமளிக்காதபடி, பாதங்களையும் நன்கு கழுவவேண்டும்.

2. பந்திக்கு முந்து, படைக்குப் பிந்து என்ற பழமொழிப்படி, அடித்துப் பிடித்துக்கொண்டு, இடித்துத்தள்ளிக்கொண்டு, பந்திக்குச் செல்லக்கூடாது. வரிசையாய் அமைதியாய்ச் செல்லவேண்டும்.

3. இலையைப் பயன்படுத்தினால், இலையின் நுனிப்பாகம் இடது பக்கம் இருக்கும்படி போடுவதுதான் நம் நாட்டு மரபு.

4. நமக்கு வேண்டிய அளவுக்குமேல் உணவை வாங்கி வீணாக்கக்கூடாது. வரட்டுக் கௌரவத்துக்காக (தீபாவளிக்கு மாமியார் வீடு வந்த மாப்பிள்ளைகளைப்போல்) பட்டினியாயிருந்து, உணவு விடுதிகளில் சென்று காசை விரயம் செய்யாதே.

5. சிலர் சாதத்தைப் பிசையும்போது குயவன் பானை செய்வதற்கு மண்பிசைவதுபோல் தோன்றும். அவர்கள் கை மணிக்கட்டுவரையில் சாதத்தில் புதைந்துகிடக்கும். இது அநாகரீகம்! கூடுமான வரையில் உள்ளங்கையில் படாதபடி சாதத்தைப் பிசைந்து சாப்பிடவேண்டும்.

6. சிலர் சாதத்தைப் பிசைந்தவுடனே காய்ந்த மாடு கம்பில் விழுந்ததுபோல் அள்ளி அள்ளி உள்ளே தள்ளுவார்கள். சிலர் வான்கோழி தவிடு தின்பதுபோல் ‘கவளம், கவளமாய்’ உருட்டிப் போடுவார்கள்.

7. சிலர் சாதத்தை எடுத்துப் பந்துபோல் உருட்டுவார்கள். துப்பாக்கியிலிருந்து குண்டு வெளிச் செல்வது போல் சாத உருண்டை கையைவிட்டுப்போய்க் குறிதவறாமல் வாயில் விழும். இது சரியான முறையல்ல.

8. சிலர் ‘நொறுங்கத் தின்றால் நூறு வயது’ என்ற கொள்கைப்படி மென்று சாப்பிடத் தொடங்கிவிடுவார்கள். போதும், போதும். இவர்கள் மெல்லும் சத்தம் விமானம் பறக்கும்போது கேட்கும் சத்தத்தைப்போல் பந்தி முழுவதும் கேட்கும். இது மற்றவர்களுக்கு மிகச் சங்கடமாயிருக்கும். நாம் எப்போதும் சத்தமில்லாமல் மென்று சாப்பிடப் பழகவேண்டும்.

9. வாத்துக்கள், குறிப்பாய் மனில்லா வாத்துக்கள், தவிடு தின்னும்போது, ஒரு கவளம் தவிடு, கொஞ்சம் தண்ணீர் இவ்விதம் மாற்றி மாற்றிச் சாப்பிடும். சிலர் இந்த வாத்துக்களைப்போல் ஒருகை சோறும் ஒருவாய் தண்ணீருமாக மாற்றி மாற்றி உட்கொள்வார்கள். சிலர் வாய்க்குள் நிறைய உணவுப்பொருளிருக்கும் போதே தண்ணீர் குடிப்பார்கள். அப்படியின்றி, சாதாரணமாய் சாப்பாட்டுக்குப் பின் தண்ணீர் குடிப்பதே சரி. உணவுக்கு முன் கொஞ்சம் தொண்டையை நனைத்துக்கொள்வது நல்லது.

10. பாயாசம் சாப்பிடும்போது, அல்லது ரசம், மோர் ஊற்றிச் சாப்பிடும்போது, ஒரே உறிஞ்ச உறிஞ்சி மற்றவர்களுடைய வெறுப்புணர்ச்சியை எழுப்பும் அளவுக்குச் சத்தம் செய்யாதே.

11. சிலர் சாப்பிடும்போது படுத்துக்கொண்டு வாயினாலேயே சாப்பிடுகிறார்களா, கையால் எடுத்துத்தான் சாப்பிடுகிறார்களா, என்று ஐயம் ஏற்படுமளவுக்குக் குனிந்து சாப்பிடுகிறார்கள்.

12. சிலர் சாப்பிட்ட பின்னர் கைகழுவவேண்டிய தேவையேயிராது. நாக்கினாலேயே எல்லா விரல்களையும் சத்தம் செய்திருப்பார்கள். இன்னும் சிலர் கோப்பை கழுவவேண்டியதில்லை என்ற முறையில் கோப்பையையும் சத்தப்படுத்தியிருப்பார்கள். அப்படி ஒன்றும் அனாச்சாரம் செய்யாதே.

13. விளையாடிக் களைத்துப் போயிருக்கும்போது உடனே ஒன்றும் குடிக்காதே. களைப்புத் தீர்ந்தபின் தாகத்தைத் தணித்துக்கொள்.

14. சாப்பிட்டு வெளியே வரும்போது சில காட்டு மனிதர்கள்போல் சத்தமாய் ஏப்பம் விடாதே.

சுருங்கச் சொல்கிறேன் :— நீ சாப்பிடும்போது எவ்விதத்திலும் நமது அருகில் இருப்பவர்களுக்கு வெறுப்பைக் கொடுக்கக்கூடாது. படித்த சிலர் இவ்விதத்தில் அநாகரீகமாய் நடப்பதைக்கண்டு, அதை நாகரிகமாக எண்ணி ஏமாந்துபோகாதே.

## 6. உடற்பயிற்சி

உடற்பயிற்சி இன்றியமையாதது. விளையாடும் நேரங்களில் நன்றாய் விளையாடு. வாய்ப்புக்கிடைக்கும் போதெல்லாம் உலாத்தலுக்குப் போ. கூடுமானால் காலையில் ஒரு பத்து நிமிஷமாகிலும் உடற்பயிற்சி எடு. வேறொன்றும் செய்ய விருப்பமில்லாவிட்டால், காலையில் எழுந்ததும் நன்றாய் மூச்சுவிடும் பயிற்சியை செய்துவா. அது ஊக்கத்தைக் கொடுக்கும்; உடல் வலிமையைத் தரும்; புத்திக்குத் தெளிவைக் கொடுக்கும்; பள்ளிக்கூடப் பந்தயப் போட்டிகள், இளைஞர் படை இவை போன்றவைகளில் கலந்துகொள்.

## 7. தூக்கம்

பிள்ளைகள் சுமார் 8 மணிநேரம் தூங்குவது நல்லது. இரவு 9 அல்லது $9\frac{1}{2}$ மணிக்குப் படுக்கப்போய், காலையில் 5 அல்லது $5\frac{1}{2}$ மணிக்கு எழுந்திருப்பது உத்தமம். சிலர் கிழவி கதைகளைச் சொல்லிக்கொண்டும், கேட்டுக்கொண்டும் 10 அல்லது 11 மணிக்குப் படுக்கச் செல்வார்கள்; காலையில் சூரியன் கதிர் அவர்கள்மேல் விழும்வரை விறைத்துக் கிடப்பார்கள். இது முறையல்ல. 'வைகறைத் துயிலெழு.'

படுத்திருக்கும்போது வலதுபக்கமாய்ச் சாய்ந்து அடக்க வொடுக்கமாய்ப் படுத்துக்கொள்ளப் பழகு. அப்படிப் படுத்தால்தான், இடதுபக்கமிருக்கும் இதயம் தன் வேலையைச் செவ்வனே செய்யக்கூடும்; இரத்த ஓட்டம் நன்றாயிருக்கும்;

காலையில் எழுந்திருக்கும்போது மயக்கம், உடல் மறந்துப் போனதுபோன்ற உணர்ச்சி ஒன்றும் தோராது.

குளிர்காலமானாலும் முகத்தைப் போர்வையால் மூடிப் படுக்காதே. படுக்கை அறையில் காற்றோட்டம் இருக்கும்படி கவனித்துக்கொள்.

சிலர் இரவில் உறங்குகையில் நீர்கழிக்க எழுந்திருக்கிறார்கள். அவர்கள் படுக்கப்போகுமுன் இதைச் செய்திருந்தால், அவ்விதம் எழுந்திருக்கவேண்டியிராது. குளிர் காலங்களில் கால்களை மூடிப் படுத்துக்கொண்டால், இரவில் எழுந்திருக்க வேண்டிய தேவை இராது.

## 8. உடை

உடை மானத்தை மூடுவதற்காக என்பதை நாம் மறந்து போகலாகாது. நாகரீக முறையென்று பையன்களும் பெண்களும் அநாகரீகமாக உடலைக் காட்டி வருதல் தவறு. மேலும் உடை விஷயத்தில் மாணவ மாணவிகள் பணத்தை விறைக்கிறார்கள். 'கந்தையானாலும் கசக்கிக் கட்டு' என்ற மூத்தோர் வாக்குக்கொப்ப, எப்போதும் சுத்தமான உடையை உடுத்திக் கொள்ள வேண்டும். பட்டாடை தேவையில்லை. தங்கள் தன்மைக்குத் தக்கவாறு உடுத்தவேண்டும். குருடனை அரச விழி விழியென்றால் அவனால் எப்படி முடியும்? வெறுங் கை முழம் போடுமா? நமது பெற்றோர் கடின உழைப்பால் நமக்குத் தேவையானவைகளை வாங்கிக் கொடுக்கவே முடியாமல் திணறுகிறார்கள். அப்படியிருக்க 'மைனர்கள்' போல் பையன்களும், நாட்டியக்காரிகளைப்போல் பெண்களும் உடுத்து வது சரியா? நம் நாட்டில் இத்தகைய வழக்கத்தால்தான் பெற்றோர் பிள்ளைகளின் கலியாண காலத்தில் உடையிலும் நகையிலும் அவ்வளவு பணத்தை விரயமாக்கி விட்டு, வாழ் நாளெல்லாம் கால்வயிற்றுக் கஞ்சிக்கும் காற்றாய்ப் பறக்கிறார்கள். நாகரீகம், 'ஃபாஷன்' என்று ஆடை அணிந்தும் அரை நிர்வாணமாய்த் திரியாதே. அடக்கவொடுக்கம் தேவை.

ஒழுக்கமும் வாய்மையு நாணும்இம் மூன்றும்
மிழுக்கார் குடிப் பிறந்தார்.

உயர்ந்த குடியிற் பிறந்த மக்கள் தமக்குரிய ஒழுக்கம், மெய்ம்மை, வெட்கம் ஆகிய இம்மூன்றிடத்தும் படிப்பில்லாது போயினும் தாமாகவே வழுவார்.

அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்(கு) அஃதின்றேல்
பிணியன்றோ பீடு நடை.

நற்குணமுடையோர்க்கு நாணமுடைமை அணிகலமாகும். அவ்வணி இல்லாவிட்டால், அவர்களுடைய பெருமிதத்தையுடைய நடை பார்ப்போருக்குப் பிணியாகத் தோற்றமளிக்கும்.

நாண் அகத்து இல்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று.

தம் உள்ளத்தில் நாணத்தைக் கொண்டிலாத மக்கள் உயிருடையோர்போன்று இயங்குகின்ற இயக்கம், மரப்பாவை இயந்திரக் கயிற்றினால் உயிருடையதாக மயக்குதலுக்கு ஒப்பாகும்.






மக்களின் மாட்சி, உயர்ந்த பிறப்பிலும் சிறந்த அழகிலு மில்லை; உடல் வலிமையிலும், நுட்ப அறிவிலுமில்லை; உள்ளத் தூய்மையிலும் உடல் தூய்மையிலுமே அடங்கியிருக்கிறது. ஆங்கிலத்தில் 'Chastity' என்பர்; தமிழில் தூய்மை, கற்பு என்பர். பழைய இலக்கியங்களில் கற்பு என்னும் சொல்லை மணமான பெண்ணின் பிரமாணிக்கத் தூய்மை வாழ்வை மட்டும் குறிக்கப் பயன்படுத்தி வந்ததாகத் தெரிகிறது. ஆனால் இப்போது கற்புள்ள பையன், பெண் என்று சொல்லும்போது தூய பையன், பெண் என்றுதான் பொருள்படுத்துகிறோம்.

தீய சொற்களுக்கும் செயல்களுக்கும் வழிந்தோடும் ஊருணியாயிருப்பது தீய நினைவுகள். ஊருணி சுத்தமாயிருந் தால், வாய்க்காலும் சுத்தமாயிருக்கும்; அதிலிருந்து வரும் தண்ணீரும் சுத்தமாயிருக்கும். அஃதேபோல் நமது எண் ணங்கள் சுத்தமாயிருந்தால், தூய வார்த்தைகளும் செயல்களும் வழிந்தோடும். ஆதலால் தீய, காம எண்ணங்களைத் தீப் பொறியைப்போல் அஞ்சி அகற்றவேண்டும்.

தீய சொற்கள் நல்ல சொற்களாயிருந்தும் குறிப்பாய் தீய பொருளும் கொடுக்கும் இருபொருட் சொற்கள், காமக் கதைகள் முதலியவைகளை நல்ல குடும்பத்தில் பிறந்த உயர்குடி மக்கள் வெறுத்து நீக்குவார்கள். சாக்கடையில் உருண்டு புரண்டு வளரும் ஈனப் பண்பினர்களே இத்தகைய வார்த்தை களைச் சொல்லுவார்கள்; கதைகளை எடுத்தோதுவார்கள்; அவைகளை ரசிப்பார்கள்.

பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரும் எள்ளப்படும்.

அறிவுடையோர் பலரும் கேட்டு வெறுக்கத்தக்க பயனற்ற சொற்களைச் சொல்லுகிறவனை எல்லாரும் இகழ்வார்கள் என்கிறார் திருவள்ளுவர். அப்படியானால் தீய, காமச் சொற்களைப் பயன்படுத்துகிறவனைச் சான்றோர்கள் எவ்வளவு இகழ்வார்கள்!

**சீர்மை சிறப்போடு நீங்கும் பயனில்**
**நீர்மை யுடையார் சொலின்.**

பயனற்ற சொற்களை நற்குணமுள்ளவர்கள் சொல்லுவாராயின் அவர்களது புகழும் பெருமையும் நீங்கிவிடும்.

கெட்ட செயல்களைப்பற்றி நாம் அறியவேண்டியது என்ன? கடவுள் ஆண் பெண்ணுக்கு இருவகைப் பசியைக் கொடுத்திருக்கிறார்—தன்னைக் காக்க; வர்க்கத்தைக் காக்க. தன்னைக் காத்துக்கொள்ள நாம் உண்கின்றோம். அதுபோல் வர்க்கத்தைக் காப்பாற்ற வர்க்கப் பசியைக் கொடுத்திருக்கிறார். நாம் எளிதாய் உண்டு உடல் நலத்தோடிருக்கும் வண்ணம் நாவில் ருசியை வைத்து உணவில் கவர்ச்சியைக் கொடுத்திருக்கிறார். பிள்ளைகளைப் பெற்றெடுத்து, அவர்களை ஆளாக்கிக் கல்வியூட்டிக் குடும்பத்தை நடத்துவதென்றால் மிகவும் தியாகம் அவசியம்; பொறுப்புத் தேவை. ஆதலால் நாம் கலியாண அந்தஸ்தின் பொறுப்புகளை எளிதில் ஏற்றுக்கொள்ளும் வண்ணம் நமது உடலில் இன்பத்தை வைத்திருக்கிறார். ஆனதால் கலியாண அந்தஸ்தில் நுழைந்த பின்னரே தம்பதிகள் உடல் இன்பத்தை அனுபவிக்கலாம். அதுவரையில் அந்த இன்பம் நமக்கு விலக்கப்பட்ட இன்பம். ஆனதால் அந்த இன்பத்தை யாருடன் அனுபவித்தாலும், எந்த விதத்தில் அனுபவிக்கத் தேடினாலும், அனுபவித்தாலும் கடவுள் திருவுளத்துக்கு மாறாக நடக்கிறோம். அது பாவச் செயல்.

தூய இதயமுள்ளவர்கள் பேறுபெற்றவர்கள்; ஏனெனில் அவர்கள் கடவுளைக் காண்பார்கள் என்று சேசுக்கிறீஸ்து மலைப் பிரசங்கத்தில் சொல்லியிருக்கிறார்.

ஓர் பெண்ணை இச்சிக்கும் கருத்தோடு அவளை நோக்குகிற எவனும் தன் இதயத்தில் அவளோடு விபசாரஞ் செய்தாயிற்று என்று சேசுக்கிறீஸ்து கூறுகிறார்.

அறன் கடை நின்றாருள் எல்லாம் பிறன் கடை
நின்றாரின் பேதையர் இல்.

பாவத்தில், நின்றவர், எல்லாரிலும் காமங்காரணமாகப் பிறன் மனைவியை இச்சித்து நின்றவனைப்போல மூடன் இல்லை.

**தூய்மையைக் காப்பாற்றச் சிறந்த வழிகள்**

1. **சோம்பல்:** சோம்பலை அகற்று. எப்போதும் ஒரு வேலையில் கவனத்தைச் செலுத்து. கடின உழைப்பு, தேகப்பயிற்சி, விளையாட்டு இவைகள் சோம்பலுக்குத் தகுந்த மாற்று.

குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட உஞற்றி லவர்க்கு.

சோம்பலிலே தங்கி திருந்திய முயற்சி இல்லாமலிருப்பவர்க்குக் குடியுங் கெட்டுக் குற்றங்களும் பெருகும்.

நெடு நீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடு நீரார் காமக் கலன்.

சோம்பலும் மறதியும் உடனே விரைவிற் செய்ய வேண்டியவைகளைத் தாமதித்துச் செய்யுங் குணமும், மிக்க தூக்கமும் ஆகிய இந் நான்கும் கேட்டினை அடையும் தன்மையவர்கள் விரும்பியேறும் மரக்கலங்களாகும்.

2. **தீய புத்தகங்கள் :** வெளியீடுகள், நாடகங்கள், காட்சிகள், திரைப் படங்கள் — எல்லாம் வாலிபரின் காம உணர்ச்சியை எழுப்புவனவாய் அமைகின்றன. சுயமரியாதை, தன்னடக்கம், தூய்மை எல்லாம் சூறாவளிக் காற்றில் போய் விட்டதுபோல் தோன்றுகின்றது. அதனால்தான் சிறுவர்களின் உள்ளத்தைக் கறைப்படுத்தும் படங்களும் வெளியீடுகளும் மிதமிஞ்சி வெளிவருகின்றன. இவைகளை நாம் வாங்கி வாசிக்கலாகாது. மனதில் அசுத்த எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் எழுப்பவல்ல காட்சிகளை விலக்க வேண்டும். அசுத்தப்

படங்களும் வெளியீடுகளும் கையில் கிடைத்தால் அவைகளை வாசித்து நமது நண்பர்களுக்குக் கொடுப்பது மிகவும் தவறான செயல். அவைகளை அடுப்பில் போட வேண்டும் அல்லது கிழித்துவிட வேண்டும்.

3. **தீய நண்பர்கள்** : கொடிய விலங்கையும் நம்பலாம் ஆனால் ஒரு தீய நண்பனை ஒருநாளும் நம்பலாகாது. 'உன் சிநேகிதன் யாரென்று சொல்; நீ யாரென்று நான் சொல்லு கிறேன்' என்பது ஓர் முதுமொழி. உன் நண்பன் அற்பப் புத்தி படைத்தவனா? நீயும் அப்படித்தானவாய். அவன் தீய ஒழுக்கமுள்ளவனா? நீயும் அவ்விதமே மாறுவாய். எத்தனை மாணவ மாணவிகள் தங்கள் வாழ்நாட்களையே இத் தகைய ஒழுக்கமற்ற நண்பர்களின் பழக்கத்தால் கெடுத்துக் கொண்டனர்! பணம் அழிந்து, படிப்புக் கெட்டு, உடல் நிலை குன்றி, பள்ளியிலிருந்து துரத்தப்பட்டுச் சென்றவர்களை காரணம் கேட்டால், அவர்கள் சொல்லும் பதில் என்ன? அந்தத் தீயசிநேகம் தான் என்பர். இரண்டாம் படிவப் பையன் தலைமை ஆசிரியரிடம் வந்து பள்ளியைவிட்டு விலகும் சீட்டைக் கேட்டான். 'ஏன் என்ன நடந்தது?' என்றார் ஆசிரியர். 'என் வாழ்க்கையே கெட்டுப் போயிற்று; என் நண்பர்களின் பழக்கத்தாலே' என்றான் பையன். நடந்தது இதுதான். நண்பர்கள் உறவினால் சினிமாப் பித்துப் பிடித் தவன்போல், அதே வெறியாயிருந்தான் சிறுவன். படம் பார்க்கத் தவறுவதில்லை. பள்ளி வரத் தவறினான். கடைசியில் பெற்றோர் அவனைப் படிப்பிலிருந்து நீக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது.

நிலத்தியல் பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்(கு)
இனத்தியல்பது ஆகும் அறிவு.

நீரானது தான் சேர்ந்த நிலத்தின் குணத்தினாலே தன் தன்மையே வேறுபட்டு அந்நிலத்தின் தன்மையை அடை கிறது. அது போல மனிதனின் அறிவு தான் சேர்ந்த இனத் தினது குணத்தால் தன்மை வேறுபட்டு அவ்வினத்தினது தன்மையை அடையும்.




கல்வியின் முக்கியத்துவத்தை எடுத்துக் கூறுவது தேவையில்லை. கல்வியில்லாமல் நம் நாட்டு மக்கள் எத்தனை குருட்டாட்டங்களில் ஈடுபடுகிறார்கள். நமது நாடு வளம் பெற வேண்டுமானால், நாகரீகம் உச்ச நிலையை அடைய வேண்டுமானால், வாழ்க்கைத்தரம் உயர வேண்டுமானால், அரசியல் நன்றாய் நடக்க வேண்டுமானால் நாம் அனைவரும் கற்றவர்களாயிருக்க வேண்டும். கல்வியில்லாதவன் குருடனுக்குச் சமம் என்று திருவள்ளுவர் பல்லாண்டுகளுக்கு முன்னே பாடினார். இருந்தும், நமது தமிழ் நாட்டில் படித்தவர்கள் மிகச் சிலரேயாவர். திருவள்ளுவர் மொழிப்படி நமது நாட்டில் பல்லாயிரக்கணக்கில் குருடர்கள் இருந்து வருகின்றனர்.

**கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்து இரண்டு**
**புண்ணுடையர் கல்லா தவர்.**

கல்வியுடையோரே கண்களை உடையவர்கள் என்று உயர்த்திச் சொல்லப்படுவர். கல்லாதவரோ முகத்தில் இரண்டு புண்களையுடையவர். (அதாவது ஊன் கண்ணினும் கல்விக் கண்ணே சிறந்தது என்பதாம்.)

**உடையார் முன் இல்லார் போல் ஏக்கற்றும் கற்றார்**
**கடையரே கல்லா தவர்.**

செல்வர் முன் வறியவர் நிற்பது போல், தம் ஆசிரியர் முன் தாள் பணிந்து நின்று கற்றவர்கள் உயர்ந்தவர்களாவர். அந்நிலைக்கு நாணிக் கற்காதவர் எக்காலத்தும் இழிவானவரேயாவர்.

**தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு**
**காமுறுவர் கற்றறிந் தார்.**

கற்று அறிந்தவர்கள் தாங்கள் இன்பமடைவதற்கு ஏதுவாகிய கல்விக்கு உலகம் இன்பமடைவதால், அச்சிறப்பு நோக்கிப் பின்னும் அதனையே விரும்புவார்கள்.

**கேடில் விழுச் செல்வங் கல்வி யொருவற்கு**
**மாடல்ல மற்றை யவை.**

கல்வியே ஒருவனுக்கு அழிவில்லாத சீரிய செல்வம். ஏனைய முத்துக்களும் பொன்னும் போல்வன அத்தகைய செல்வமல்ல.

**கல்லாதான் ஒட்பம் கழிய நன்றாயினும்**
**கொள்ளார் அறிவுடை யார்.**

கற்காதவனுடைய இயற்கையறிவு மிக நன்றாயிருந்த போதிலும், அறிவுடையவர்கள் அதனை அறிவுடைமையாகக் கொள்ள மாட்டார்கள். (அதனைக் கோல் விழுக்காடாக அஃதாவது தற்செயலாக ஏற்பட்டதாகக் கொள்வர்.)

**நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில் நலம்**
**மண்மாண் புனைபாவை அற்று.**

நுட்பமாகி மாட்சிமைப்பட்டுப் பல நூல்களிலும் நுழைந்தறிந்த அறிவு இல்லாதவனுடைய எழுச்சியும் அழகும் சுண்ணச் சாந்தினாலே அலங்கரிக்கப்பட்ட பாவையினது எழுச்சிக்கும் அழகுக்கும் ஒப்பாகும்.

**மேற் பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப் பிறந்தும்**
**கற்றார் அனைத்து சிலர் பாடு.**

படிப்பில்லாதவர் உயர்ந்த சாதியில் பிறந்திருந்த போதிலும், தாழ்ந்த சாதியில் பிறந்திருந்தும் படிப்புள்ளவர்களாகியோர் போலப் பெருமை உடையவர்களாக மாட்டார்கள்.

**விலங்கொடு மக்கள் அனையர் இலங்கு நூல்**
**கற்றாரோடு ஏனை யவர்.**

விலங்குகளை நோக்க மக்கள் எத்துணை அறிவு மேம்பாடுடையவரோ அத்துணை அறிவு மேம்பாடுடையவர் கல்லாத

வரை நோக்கக் கற்றவர். (விலங்கினுக்கும் சாதாரண மனித னுக்கும் இடையே உள்ள ஏற்றத் தாழ்வுகள் கல்லாதவனுக் கும் கற்றவனுக்கும் இடையே உண்டு.)

கல்வி கற்கும் காலத்தில் நாளை வீணாக்கிப் பிற்பாடு இதை நினைத்து வருந்துவதில் யாதொரு பயனுமில்லை. நமது பெற்றோர் தங்கள் பொருட் செலவையும் கவனியாது நம்மைப் பள்ளிக்கு அனுப்பி வைப்பது எதற்காக? ஊரை வலம் வருவதற்காகவா? ‘மைனர்கள்’ போல் உடுத்திக் காட்சி யளிக்கவா? படிப்பை அசட்டை செய்து, சினிமாப் பார்த்து விமர்சனம் கூறுவதில் பரிசுபெறுவதற்கா? பள்ளியில் உள்ள எல்லா விளையாட்டுப் போட்டிகளிலும் கலந்து கொண்டு, படிப்பை மட்டும் கவனியாமல் இருப்பதற்கா? அல்ல. நாம் இப்போது ஊக்கத்துடன் கல்வி கற்று, பிற் காலத்தில் அவர்களுக்கும் நமக்கும் சமூகத்துக்கும் பயனுள்ள குடி மக்களாய் இருப்பதற்கன்றோ? ஆகையால் படிப்பில் அக்கறை காட்ட வேண்டும்.

**கற்க கசடறக் கற்பவை கற்ற பின்**
**நிற்க அதற்குத் தக.**

ஒருவன் படிக்கும் நூல்களைப் பழுதறக் கற்க வேண்டும். அப்படிக் கற்ற பின் அக் கல்வியறிவிற்கேற்ப நல்வழியில் வழுவாது நடக்க வேண்டும்.

அநேகமாய் மாணவர்கள் கற்கும் முறையறியாமல் கண்ட கண்ட ‘நோட்ஸ்’ எல்லாவற்றையும் கரைத்துக் குடிப்பார்கள். கேட்ட கேள்விக்குப் புத்திசாலித்தனமாய்ப் பதில் கொடுக்கத் தெரியாமல் விழிப்பார்கள். வேறு சிலர் தொடர்ந்து படிக்காமல், வண்ணாத்திப் பூச்சிபோல ஒவ்வொரு பாடத்தையும் முகர்ந்து நேரத்தை வீணே போக்குவார்கள். இவை கற்கும் முறைகளல்ல.

1. நன்றாய்ப் படிப்பதற்கு மாணவர்கள் தாமே **கால அட்டவணை** ஒன்று குறித்துக் கொள்ள வேண்டும். எந்தப் பாடம் கடினமாயிருக்கிறதோ அதைக் காலை வேளையில்

படிக்கக் குறிக்க வேண்டும். ஏனெனில் நல்ல தூக்கத்துக்குப் பின்னர் புத்தி தெளிவு பெற்றிருக்கும். பள்ளியிலிருந்து வந்தவுடனே வீட்டுப்பாடங்கள், கணக்குகள், எழுத்து வேலைகள் அனைத்தையும் மாலையிலேயே முடித்து விட வேண்டும். பாடம் படிப்பதிலும் ஒரே பாடத்தை மணிக்கணக்காய்ப் படிப்பதில் பயனில்லை. அப்படி செய்தால் அதிகக் களைப்பு ஏற்படும். பின் புத்தியை மற்றப் பாடங்களில் செலுத்த இயலாது. ஆகையால் தேவைக்குத் தக்கவாறு ஒவ்வொரு பாடத்துக்கும் வேண்டிய நேரத்தைத் திட்டம் செய்து, அதன்படி படிக்க வேண்டும்.

2. படிக்கும் பாடங்களைப் **பொருளுணர்ச்சியோடு படிக்க** வேண்டும். பாடங்கள் நன்றாய் புரியா விட்டால் ஆசிரியரையோ, மற்றக் கெட்டிக்காரப் பையன்களையோ கேட்டறிய வேண்டும்.

> **செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம் அச்செல்வம்**
> **செல்வத்துள் எல்லாம் தலை.**

செல்வங்களிலெல்லாம் சிறப்புடைய செல்வம் செவியால் வரும் செல்வமே.

சில பிள்ளைகள், ஏன் இக்காலத்தில் எல்லாப் பிள்ளைகளுமே, கிளிப் பிள்ளைகளைப் போல் தாங்கள் படிப்பது இன்னதென்று அறியாமல் மனப்பாடமாய், 'நெட்டுரு'ப் போடுவார்கள். கணக்குப் பாடங்களிலும் 'ஜியாமெட்ரி' முதலியவைகளைப் பாராமல் படிப்பார்கள். தேர்வில் கேள்வி சிறிது மாறி வந்தால் அவர்கள் திணறுவார்கள். 10 படி பசும் பாலோடு 8 படி எருமைப்பாலை ஒருவன் கலந்து விற்றான் என்று படித்து வந்திருப்பார்கள். கேள்வித்தாளில் 12 படி எருமைப் பாலில் 6 படி தண்ணீரைக் கலந்தான் என்று பார்த்ததுமே மிகவும் கலங்குவார்கள். இவ்விதம் குருட்டுப் பாடமாய்ப் படித்து யாது பயன்? எப்போதுமே கருத்தைக் கண்டு பிடித்து, புரியாவிடில் கேட்டுக் கற்றுக் கொள்ள வேண்டும்.

புது மொழி கற்கும் போது வார்த்தை உச்சரிப்பு, ஒலி, மாத்திரை இவைகளையெல்லாம் கவனிக்க வேண்டும். எழுத்துப் பிழைகளை நீக்க வேண்டும். புது மொழியை எழுதிப் படிக்க வேண்டும்.

3. படிக்கும் போது **கவனத்தைச்** செலுத்துவது அதிமுக்கியம். நினைவுகளைச் சிதறவிடக் கூடாது. புத்தியை ஊர் சுற்றவிடலாகாது. வீண் பராக்குகளுக்கும் இடங் கொடுத்தலாகாது. அடிக்கடி சினிமாக்கள் பார்த்துவரும் பிள்ளைகள் எவ்விதம் படிப்பில், புத்தகத்தில் கவனத்தைச் செலுத்தக் கூடும்? அவர்கள் பார்த்த பேசும் படங்கள் அனைத்தும் ஊமைப் படங்களாய் மனக் கண் முன் மாறி மாறித் தோற்றமளித்துக் கொண்டிருக்கும். கண்கள் புத்தகத்திலிருக்க, புத்தி சினிமாக் கொட்டகையில் இருக்கும். ஆகையால் படிக்கும் பிள்ளை பள்ளிக்கூட நாட்களில் நல்ல படங்களைக் கூட அடிக்கடி பார்க்க வொண்ணாது. சிலர் படிக்கும் போதே பக்கத்தில் நடக்கும் எல்லாவற்றையும் காண முயற்சிப்பார்கள். வேறு சிலர் படிக்கும் போதே சினிமாப் பாட்டுகளை ரீங்கரித்துக் கொண்டிருப்பார்கள். இவர்கள் எவ்விதம் புத்தியைப் படிப்பில் செலுத்தக் கூடும்?

'செய்வன திருந்தச் செய்'! எப்பாடத்தை எடுத்தாலும் அதை நன்றாய்க் கண்டு பிடிக்கும் வரை அதில் புத்தியைச் செலுத்துவது அவசியம். பட்டும் படாமலும், தொட்டும் தொடாமலும் இன்றைக்குப் படித்ததை நாளைக்கு மறந்து போகும் வகையில் அரைகுறையாய்ப் படிக்கலாகாது.

**உள்ளம் உடைமை உடைமை பொருளுடைமை**
**நில்லாது நீங்கிவிடும்.**

ஒருவனுக்கு ஊக்கமே நிலைபெற்ற உடைமை. மற்றப் பொருளுடைமையானது நிலைபெறாமல் நீங்கிவிடும்.

**சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதைஅம்பின்**
**பட்டுப்பாடு ஊன்றும் களிறு.**

யானை ஒரு கட்டு அம்புகளால் புண்பட்டுவிட்டபோதும் தளராமல் மிக்க வீரத்தைக் காட்டித் தன் பெருமையை நிலை நிறுத்தும். அஃதேபோல் மனவெழுச்சியையுடையவர் தாம் நினைத்த உயர்ச்சிக்கு அழிவு வந்தபோது தளராமல் அதிக ஊக்கத்தோடு முயன்று தம் பெருமையை நிலைநிறுத்துவர்.

4. படித்த பாடங்களை அடிக்கடி **திரும்பிப் பார்க்க வேண்டும்.** அன்றாடம் படித்தவைகளை வீட்டுக்குச் சென்றதும் மறுபடியும் பார்த்து, நன்றாய்க் கண்டுணர முயற்சிப்பது அவசியம். புரியாதவைகளைக் குறித்துவைத்து அவைகளுக்கு விளக்கம்கேட்டு அறிந்துகொள்ளவேண்டும். சிலர் தேர்வு காலம்வரையில் காத்திருந்து, அப்போதுதான் பாடத்தைத் திருப்பிப் பார்க்கத் தொடங்குவார்கள். இது தவறு.

5. நன்றாய்ப் படிப்பதற்கு **அடிக்கடி எழுதிப் படிப்பது** நல்லது. புதுமொழி படிப்பதற்கு இவ்வழி இன்றியமையாதது. சிலர் புத்தகத்தை வைத்துக்கொண்டு பகற்கனவில் நேரத்தை வீணாக்குவதைவிட, ஒரு கற்பலகையில் அல்லது தாளில் எழுதிப் படித்தால் எளிதினில் புத்தியில் பதியும். சிலவேளைகளில் எல்லாம் தெரிவதுபோல் தோன்றும். ஆனால் அது வெறும் தோற்றமே. ஏனெனில் எழுதத் தொடங்கினவுடனே வார்த்தைகள் வர மறுக்கின்றன; பென்சில் அசைய மறுக்கிறது. அப்போதுதான் பாடம் இன்னும் சரியாக நமக்குப் புரியவில்லை என்னும் உண்மை மாணவர்க்குப் புலப்படும்.

6. இவற்றிற்கெல்லாம் மேலாக, **கடவுளின் ஆசியை வேண்டுதல்** இன்றியமையாதது. "அவனன்றி அணுவும் அசையாது." அவனது திருவருளின்றி நாம் எதையும் சாதிக்க இயலாது என்பதை உணர்ந்து, நாள்தோறும் இறைவனருளைப்பெறப் பிரார்த்திக்கவேண்டும்.

ஒரு கற்றறிந்த பெரியார் கூறுவதாவது : " நாம் படிக்கும்போது, எல்லாம் நம்மாலேதான் ஆகவேண்டுமென்னும் மனப்பான்மையோடு ஊக்கத்துடன் படிக்கவேண்டும். நாம் கடவு

னிடம் வேண்டிக்கொள்ளும்போது, நமது சகல முயற்சியெல்லாம் அவரது அருளின்றி வீண் என்ற உண்மையை உணர்ந்தவர்களாய் வேண்டிக்கொள்ளவேண்டும்."

இங்ஙனம் நாம் படித்தால், நாம் தேர்ச்சி பெறுவோமென்னும் நம்பிக்கை மாணவருக்கு இருக்கும்.

## 2. ஆசிரியர்கள் :

மாணவர்கள் "நமது ஆசிரியர்கள் நமது பெற்றோருக்குப் பதிலாக இருக்கிறார்கள்" என்பதை நினைவுபடுத்திக் கொள்ளவேண்டும். அவர்கள் வேலை மிகமிகப் பொறுப்பானது. இளவயதிலேயே சிறுவர்களுக்குக் கல்வியூட்டி, நல்ல பண்புகளை ஊட்டும் கடமை அவர்களுடையது. அவர்களை மாணவர் என்றும் பெருமைப்படுத்த வேண்டும். ஆயுள்காலமெல்லாம் இக்குருபக்தி நெஞ்சைவிட்டு அகலக்கூடாது. வெளியில் எந்தச் சந்தர்ப்பத்தில் அவர்களைக் கண்டபோதிலும் அவர்களுக்கு மரியாதை காட்டுவது அழகு. பிற்காலத்தில் நாம் உயர்ந்த பதவியில் இருந்தாலும், நமக்குச் சிறுவயதில் கற்றுக் கொடுத்த ஆசிரியர்களை நாம் கனப்படுத்துவதால், நமது பெருமை குறையாது; பன்மடங்கு உயரும் என்பதை ஒவ்வொருவரும் தெரியவேண்டும்.

ஒரு சமயம் வட்டாரக் கல்வி அதிகாரி உயர்நிலைப் பள்ளி ஒன்றை மேற்பார்வையிட வந்திருந்தார். ஆசிரியர்கள் பேரை வாசித்தவர் சற்றே வியந்தார். ஒரு ஆசிரியரைத் தன்னிடம் அழைத்துவரச் சொன்னார். அந்த ஆசிரியர் இதைக் கேள்வியுற்றதும் காரணம் புரியாமல் கலங்கினார். கல்வி அதிகாரியின் சினத்துக்கு உள்ளாவோமோ என்று அஞ்சிக்கொண்டே உள்ளே நுழைந்தார். ஆனால் இது என்ன! கல்வி அதிகாரி எழுந்து அவருக்கு மரியாதை செய்தார். 'சார், அந்த ஊரிலே நான் உமது மாணாக்கனாய் இருந்ததை நீர் மறந்துவிட்டீரோ?' என்று சொல்லி, ஆசிரியரைப் பாராட்டினார். ஆசிரியர் அச்சம் கலைந்து, முகத்தில் புன்னகை தோன்றிற்று. மனமகிழ்ச்சி

யுடன் அவ்வறையை விட்டுத் திரும்பினார். இதைக் கேள்வி யுற்ற மற்ற ஆசிரியர்கள் கல்வி அதிகாரியை மிகவும் பாராட்டினார்கள்.

படிக்கும் நாட்களில் தமது ஆசிரியருக்கு இன்பத்தை அளிக்க விரும்புவோர் நல்ல பிள்ளைகளாய் வகுப்பில் நடந்து, அவர் சொல்லிக்கொடுப்பதைக் கருத்தூன்றிக் கவனிப்பது கடமையாகும். நல்லாசிரியர்க்கு மகிழ்ச்சியளிப்பதில் இதனிற் சிறந்தது ஒன்றும் இல்லை.

### 3. பள்ளியில் மாணவர் பின்பற்ற வேண்டிய சில ஒழுங்குகள் :—

1. பள்ளிக்கு முதல் மணி அடித்தவுடனே எல்லோரும் வகுப்புக்குச் சென்று ஆசிரியர் வரும்வரை அமைதியாயிருக்க வேண்டும். பள்ளிக் கூட்டம் கூடுவது வழக்கமானால் அணிவகுத்து அமைதியாய் நிற்க வேண்டும்.

2. ஆசிரியர் கதவருகில் நெருங்கியவுடனே, எல்லோரும் எழுந்து நிற்க வேண்டும். அவர் உள்ளே வந்து உட்கார்ந்த பின்னரே, அல்லது உட்காருங்கள் என்று அவர் சொன்ன பிறகே எல்லோரும் உட்கார வேண்டும். தலைமை ஆசிரியர் அல்லது அதிகாரிகள் நமது வகுப்புக்குள் வரும் பொழுதும் இவ்வண்ணமே நடக்க வேண்டும்.

காலை முதல் வகுப்பில் மாணாக்கர்கள் வணக்கம் கூறும் மரபு சில பள்ளிகளில் இருக்கிறது. அந்தப் பள்ளிகளில் எல்லோரும் ஒரு குரலாய் ‘வணக்கம்’ தெரிவிக்க வேண்டும்.

3. பள்ளித் தொடங்கு முன் கூட்டமிருந்தால், கூட்டம் முடிந்ததும் பிள்ளைகள் வகுப்பு வகுப்பாய் இரைச்சலிடாமல், சந்தடி செய்யாது வரிசையாய் வகுப்புக்குப் போக வேண்டும். அங்கே மேலே கூறிய முறையில் நடந்து கொள்ள வேண்டும்.

4. வகுப்புக்கு வருமுன் போக வேண்டிய இடங்களுக் கெல்லாம் போய் விட வேண்டும். சிறு குழந்தைகளைப்

போல் ஒரு பகுதி 'பீரியட்' முடியுமுன் அல்லது முடிந்த பின் வெளியே போக உத்தரவு கேட்கக்கூடாது.

5. ஒரு வகுப்பிலிருந்து மற்றொரு வகுப்புக்குச் செல்லும்போது, இரைச்சலிட்டுக் கொண்டு, தாழ்வாரங்களில் ஆடி அசைந்து செல்வது மாணவர்களுக்கு அழகல்ல. எங்கே சென்றாலும் 'கியூ' வரிசையில் போகவேண்டும்.

'கியூ' என்று சொல்லுகிறோமே, அதற்கு ஆங்கில வார்த்தை 'Queue.' அதன் பொருள் சடை பின்னல். சடையின் ஒப்புமையால் அச்சொல் ஒருவர்பின் ஒருவர் வரிசையாக நிற்பது, செல்வதைக் குறிக்கிறது. இந்த 'கியூ' முறையை நாம் எங்கும் நடைமுறையில் கையாளவேண்டும். பள்ளிக்கூடத்தில் மட்டுமல்ல, அன்றாட வாழ்க்கையில் கடையில் ஏதாகிலும் ஒரு பொருள் வாங்கினாலும், ரயில் நிலையத்தில் பயணச் சீட்டு வாங்கினாலும், பஸ்ஸில் ஏறினாலும் அநாகரீக மக்களைப்போல் அடித்துப் பிடித்துத் தள்ளாதபடி வரிசையாயிருந்து எதையும் செய்யப் பழகவேண்டும்.

6. வகுப்பு முடிந்து வெளியே செல்லும்போது எழுந்து ஓடக்கூடாது. ஆசிரியர் எழுந்தபின் எல்லோரும் எழுந்து, அவர் வெளியே போனபிறகு மற்றவர்கள் சந்தடியில்லாமல் போகவேண்டும்.

7. வகுப்பிலோ, தாழ்வாரத்திலோ பேச நேரிட்டால் அமைதியாய்ப் பேசக் கற்றுக்கொள்ள வேண்டும். சிலர் காட்டு மனிதர்களைப்போல இரைந்து பேசுவார்கள்.

8. வகுப்பில் ஆசிரியரிடம் ஏதாகிலும் கேட்க அல்லது சொல்ல விரும்பினால், எழுந்து பணிவுடன் கேட்க வேண்டும். பெஞ்சில் ஒரு கால் வைத்து நிற்பது; சுவற்றில் காலை ஊன்றி நிற்பது இவைகள் அநாகரிகச் செயல்கள்.

9. தரையிலும் வகுப்பிலும் தாழ்வாரங்களிலும் காகிதத்தைக் கிழித்து எறியாதே.

10. தரையிலும் சுவரிலும் மேசைகளிலும் மற்றவர் மேலும் மையை உதறாதே. அரையணா ஊற்றுப் பேனாவை

வைத்துக்கொண்டு அறையெல்லாம் மையால் அசுத்தப் படுத்தாதே.

11. மேசைகளிலும், சாய்வு மேசைகளிலும், பெஞ்சி லும், சுவர்களிலும், கதவுகளிலும் கிறுவது, எழுதுவது, கோடு கிழிப்பது இவைபோன்றவைகள் மிகவும் அநாகரீகச் செயல் கள்.

12. சைக்கிள்களை ஒழுங்காக வைத்துப் பூட்டிவிட வேண்டும். கண்ட நேரத்தில் சைக்கிள் மணியை அடிப்பது கிறுக்குத்தனம்.

13. வகுப்பு நேரத்தில் உத்தரவின்றிக் கள்ளத்தனமாய் வெளியே செல்லாதே.

14. வகுப்பில் மேசைகளிலும் டெஸ்குகளிலும் பெஞ்சுகளிலும் குதிப்பது, சாய்வுகளில் நின்று கூத்தாடுவது இவை மாணவர்களுக்கு அழகல்ல.

15. பள்ளியில் பாடச் சம்பந்தமான படங்கள் காட்டும் போதும், பள்ளிக் கூட்டங்கள் கூடும்போதும், ஆண்டு விழா, பள்ளி விழா நாட்களிலும் நமது ஆர்வத்தைக் காட்ட விரும் பினால் கைதட்டுவது தவறல்ல. ஆனால் தாளம்போடுகிறது போல் கை தட்டுவது மரியாதைக் குறைவு. பெஞ்சு, மேசை களில் படபடவென அடிப்பது காட்டுத்தனம். 'ஸ்' என்று தொடங்கி விடுவது காலித்தனம். இத்தகைய மாணவர்களைப் பள்ளியில் வைத்திருப்பது பள்ளியின் நற்பெயருக்கே இழுக் காம்.

16. அநேக பிள்ளைகள் கூடியிருக்கும் இடத்தில் இருந்து படித்தால், மற்றவர்களுக்கு இடையூறாய் இல்லாதபடி மனதுக்குள் படிக்கவேண்டும். சில பிள்ளைகள் செக்குக் கத்துவதுபோல் சப்தம் செய்துகொண்டு படிப்பார்கள். இன்

னும் சிலர் அநாகரிகமாகக் கால்களைப் பெஞ்சில் தூக்கி வைத்துக்கொண்டு படிப்பார்கள். சிலர் கால்களைத் தலையில் போட்டுக்கொள்வதுபோல் டெஸ்கில் போட்டுக்கொள்வார்கள். சிலர் கை கால் தலை மூக்கு வாய் காது அத்தனையும் ஆட்டி அசைத்துப் பரத நாட்டியம் செய்வதுபோல் படிப்பார்கள். சிலர் உட்கார்ந்து படிக்கும்போது தையல் மிஷின் ஓட்டுவது போல் காலை வெகு வேகமாய் அசைப்பார்கள். இவையனைத்தும் அழகல்ல.

17. தேர்வில் கள்ளத்தனமாய்ப் பார்த்து எழுதாதே. இது அற்பத்தனம். மானங்கெட்ட முறை.

18. அநீத முறைகளால் மேல் வகுப்புக்குப் போகவோ உயர்ந்த மார்க்குகள் வாங்கவோ முயற்சி செய்யாதே.

19. உன் செல்வச் செருக்கால் லஞ்ச ஊழலைப் பள்ளியிலும் புகுத்தாதே.

20. சுயமரியாதையுள்ள மாணாக்கனாய் நட. ஆசிரியர்களுக்குக் கள்ளக் கும்பிடு போடுவதும், அவர்களைக் 'காக்கா' பிடிப்பதும் சுயமரியாதைக்கு மாறானவை.

21. பள்ளிக்கும் சரி, கூட்டத்திற்கும் சரி எப்போதுமே குறித்த நேரத்தில் குறித்த இடத்தில் இருக்கப் பழகவேண்டும். சில பிள்ளைகள் எக்காலமும் 'லேட்'தான். அவர்களுக்கு 'லேட் சீசன் பாஸ்' கொடுத்துவிடலாம். எப்போதுமே எங்குமே நமது மக்கள் அநேகமாய்க் குறித்த நேரத்தில் ஒரு நிகழ்ச்சியைத் தொடங்கமாட்டார்கள். பஜனை 5 மணிக்கு என்று சொல்லுவார்கள். 6 மணிக்குக்கூடத் தொடங்கமாட்டார்கள். இதனாலேயே கால ஒழுங்கின்மை பற்றி 'Indian punctuality' 'அதாவது இந்தியருடைய குறித்த நேரம்' என்று நம்மைக் கேலியாகப் பேசிக் குறை கூறிச் சொல்வதுண்டு. இந்த இழிவை இனியாகிலும் போக்க முயற்சிக்கவேண்டும்.



# நமது பெற்றோர்

‘அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்’ அவர்கள் தான் நமது கண் கண்ட தெய்வம். உயிரைக் கொடுத்து இவ்வுலகிற்குக் கொண்டு வந்தவர்கள். நம்மைச் சிசுவிலிருந்து பேணி, வளர்த்து கல்வி யூட்டிச் சமூகத்தில் ஆளாக்கி வைக்கிறவர்கள். அவர்களை நாம் கனப்படுத்த வேண்டும்; அவர்களுக்கு அன்பு செய்ய வேண்டும்; அவர்களுக்குக் கீழ்ப்படிய வேண்டும்.

1. **நாம் கனப்படுத்த வேண்டும்.** அவர்களைப் பற்றிப் பெரிதும் மதிப்புக் கொள்ள வேண்டும். அவர்கள் அழகு இல்லாமலிருக்கலாம், கல்வியறிவில்லாமல் இருக்கலாம். நாகரிக மற்றவர்களாய்த் தோன்றலாம். எத்தனை குறைகளை நாம் அவர்களிடம் கண்ட போதிலும் அவர்கள் நம்மைப் பெற்றெடுத்தவர்கள்; நமது பேருபகாரிகள். அவர்களிடமிருந்துதான் நமது உடல், உணவு, உடை, கல்வி அனைத்தையும் பெற்று வருகிறோம். நாம் இரண்டு கோணல் எழுத்தைப் படித்து விட்டதால் அவர்களைப் பெற்றோரென மதிக்காமலிருப்பது முறையா? ஒரு உயர் நிலைப்பள்ளி மாணாக்கன் தெருவில் தன் தாயுடன் வந்தான். தாய் தலையில் ஓர் புல்லுக் கட்டைச் சுமந்து வந்தாள்; அவள் ஏழை. வழியில் அவன் மகன் தன் பள்ளி நண்பனைக் கண்டதும், தாயை விட்டு விலகி அவள் யாரோ ‘ஒரு கூலிப் பெண்’ என்று காட்டும் முறையில் நடந்து கொண்டான். இது எத்தனை முறைகேடான செயல்? படிப்பில்லாத தாய் தந்தையர் தங்கள் உழைப்பினால் பாடுபட்டுத் தம் பிள்ளையைப் படிக்க வைத்து இவ்வளவு உயர்வுக்குக் கொண்டு வந்ததற்குப் பிள்ளை செய்யும் நன்றியா இது?

எவ்விதம் அவர்களைக் கனப்படுத்துவது? அவர்கள் மட்டில் மரியாதையுடன் நடந்து கொள்ள வேண்டும். அந்த மரியாதை வார்த்தையிலும் செயலிலும் தோன்ற வேண்டும். படித்த பிள்ளைகளாகிலும் பெற்றோரை 'நீங்கள் வாருங்கள்' என்றாற் போல மரியாதையாய் அழைக்க வேண்டும்; அவர்கள் வினாவிற்கு முரட்டுத்தனமாய்ப் பதிலளிக்கலாகாது. அவர்களைக் கேலி செய்வது, எதிர்த்துப் பேசுவது இவையெல்லாம் தவறு. அவர்களுடைய அறியாமையைப் பற்றி அல்லது வறுமையைப் பற்றி ஒரு போதும் வெட்கப் படக் கூடாது. பெற்றோரைப பற்றிக் கேவலமாய்ப் பிறரிடம் பேசக்கூடாது.

**பணிவு உடையன் இன் சொலன் ஆதல் ஒருவற்(கு)**
**அணி அல்ல மற்றுப் பிற.**

பெரியோரிடத்தே வணக்க முடையவனாகி, அவர்களிடத்தில் இனிய சொல்லை யுடையவனாய் இருப்பதே ஒருவர்க்கு அணிகலமாம்; அவையன்றி உடம்பில் அணியும் மற்ற அணிகலங்கள் அணிகலங்களல்ல.

**செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்**
**வானகமும் ஆற்றல் அரிது.**

தான் ஒரு உதவியும் செய்யாதிருக்கும்போது, ஒருவன் தனக்குச் செய்த உதவிக்கு மண்ணையும் விண்ணையும் ஈடாகக் கொடுத்தாலும் போதாது என்று கூறுகிறார் திருவள்ளுவர். நம்மைப் பெற்றோர் நமக்கு எத்தனை உதவிகளைப் புரிந்திருக்கின்றனர்?

**நன்றி மறப்பது நன்றன்று; நன்றல்ல(து)**
**அன்றே மறப்பது நன்று.**

ஒருவன் செய்த நன்மையை மறந்துவிடுதல் அறமன்று. அவன் செய்த தீமையைச் செய்தபொழுதே மறந்துவிடுதல் தான் அறம்.

2. அவர்களுக்கு **அன்பு செய்தல் வேண்டும்.** அவர்கள் மட்டில் உண்மையான அன்பு கொள்ளவேண்டும்.

இயற்கையாகவே கடவுள் இந்த அன்பை நமக்குக் கொடுத்திருக்கிறார். பெற்றோரை நேசியாதவனை அற்புதப் பிறவி என்றுதான் சொல்லவேண்டும். நாம் ஒருவனை நேசித்தால் அவருக்குப் பலவிதத்தில் நன்மைகளை விரும்புவோம். அது போல் நமது பெற்றோருடைய நலன்களை நாம் என்றும் விரும்ப வேண்டும்; அவர்களுக்கு யாதொரு கேடும் விரும்பக் கூடாது; அவர்களைத் துன்புறுத்தி அவர்கள் மனதை நோகச் செய்யலாகாது; படிக்கும் காலத்தில் தேவைக்குமேல் பணத்தைப் பெற்று வீணாக்கலாகாது; அவர்களுக்காகக் கடவுளைப் பார்த்துப் பிரார்த்தனை செய்யத் தவறலாகாது.

நாம் வேலை பார்த்துச் சம்பாதிக்கும் காலத்தில், நம்முடைய சம்பாத்தியத்தைப் பிரமாணிக்கமாய் அவர்களிடம் கொடுத்துவரவேண்டும். அவர்கள் இல்லத்தை விட்டுத் தனிக்குடித்தனமாயிருக்கும்போதும், பெற்றோரை அசட்டை செய்யலாகாது. அவர்களுக்கு வேண்டிய பொருளுதவியும் செய்யவேண்டும். அவர்களுடைய தள்ளாத வயதிலும் நோய் உற்ற காலத்தும், அவர்களைத் தேற்றி ஆறுதலளிக்கவேண்டும்.

3. நமது பெற்றோருக்கு **நாம் கீழ்ப்படிய வேண்டும்.** பெற்றோருக்குக் கீழ்ப்படிதல் பிள்ளைகளின் முக்கியக் கடமை. பெற்றோருக்கு வீட்டில் அதிகாரமில்லையானால், வீடு குட்டிச் சுவரே. கடவுளிடமிருந்தே பெற்றோர் நம்மை ஆளும் அதிகாரத்தைப் பெற்றிருக்கிறார்கள். ஆதலால் நாம் நமது பெற்றோருக்குக் கீழ்ப்படியும்போது, கடவுளுக்கே கீழ்ப்படிகிறோம் என்று எண்ணிப் பாவமான செயல்களில் ஈடுபடும்படி அவர்கள் கட்டளையிட்டாலொழிய மற்ற எல்லாக் காரியத்திலும் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். ஒரு தாய் பக்கத்து வீட்டுக் கோழியைத் திருடி வா என்று தன் மகனுக்கு உத்தரவு பிறப்பித்தால் அவன் கீழ்ப்படிதல் கடமையா? இல்லை. களவு பாபச்செயல்.

கீழ்ப்படியும்போது விளக்கெண்ணெய் சாப்பிட்டவன் முகம்போல வைத்துக்கொண்டு சிலர் சொன்ன வேலையைச்

செய்வார்கள். வேறு சிலர் எண்ணெயில் அப்பளம் பொறி கிறதுபோல முணுமுணுத்துக்கொண்டு செய்வார்கள். அப்படி யன்றி இன்முகத்துடன், உற்சாகத்துடன் நாம் கீழ்ப்படிய வேண்டும்.

**மகன் தந்தைக்(கு) ஆற்றும் உதவி இவன் தந்தை**
**என் நோற்ருன் கொல் எனும் சொல்.**

தன்னைக் கல்வியுடையவனாக்கிய தகப்பனுக்கு மகன் செய்யும் எதிர் நன்றியாவது, இவனது தந்தை இவனைப் பெறு வதற்கு என்ன தவம் செய்தானோ என்று பலரும் சொல்லத் தக்க முறையில் நற்குணமும் நல்ல பண்புமுடையவனாய் நடத் தலேயாகும்.



# உடன் பிறந்தார்



பொதுவாகக் குடும்பங்களில் ஒரு பிள்ளைமட்டுமிருக்கிறதில்லை. நமது தமிழ்க் குடும்பங்களில் பையன்களும் பெண்களுமாய் வீடு நிறையப் பிள்ளைகள் இருப்பார்கள். நாம் நமது உடன்பிறந்தாரை நேசிக்கவேண்டும். நாமெல்லோரும் ஒரே தாயின் வயிற்றில் பிறந்தவர்கள்; ஒரே வீட்டில் வளர்ந்தவர்கள்; இன்ப துன்பத்தில், வறுமை பெருமையில் பங்குபெற்றவர்கள். உலகிலே எங்கேயாகிலும் மெய்யன்பு இருக்கிறதென்றால், அது குடும்பத்திலுள்ள பிள்ளைகள் நடுவில்தான் இருக்கக்கூடும்; இருக்கவேண்டும். அவர்கள் அனைவரும் மிகமிக நெருங்கிய அன்பினால் பிணைக்கப்பட்டவர்கள்.

நல்ல பண்புகள் வீட்டில்தான் தொடங்குகின்றன. பல குழந்தைகளிருக்கும் வீட்டில் பிறந்து வளர்ந்தவன் சுயநலவாதியாய் இல்லாமல் விட்டுக்கொடுக்கும் தன்மையில் பழகுவான். தியாகப் பான்மை, பிறருக்குப் பணியாற்றும் பண்பு, பிறர் நேசம் முதலியவை மிளிரும். சகோதர சகோதரிகள் ஒருவர் ஒருவரை நேசிக்கவேண்டும். மற்றவர்களுக்கு மகிழ்வைக் கொடுக்கும் முறையில் வீட்டில் நடந்துகொள்ள வேண்டும்.

பொறாமை என்பது நல்லதல்ல. கையிலுள்ள ஐந்து விரல்களும் ஒரே மாதிரியாக இல்லை. அதுபோல் வீட்டில் வலிமையுள்ள பிள்ளைகளும் இருப்பர்; வலுவற்ற குழந்தைகளும் இருப்பர். ஒவ்வொரு குழந்தையின் தேவையையும் ஏற்ற வகையில் பெற்றோர் கவனித்து வர வேண்டும். சிறு பிள்ளைகள் குற்றஞ் செய்தால் அவர்களை அடிக்கும் தாய் வயதான பையனை அல்லது பெண்ணைக் கை ஓங்கி அடிப்பாளா? இது

ஓரவஞ்சனையென்று குறைகூற முடியுமா? இதுபோல்தான் சில வேளைகளில் பெற்றோர் அதிகச் செல்லமோ அன்போ ஒரு குழந்தையிடம் காட்டக் கூடும். அதனால் நாம் பொறுமை கொண்டு பொருமி வெடிக்கலாகாது.

அழுக்காறு உடையார்க்(கு) அதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடுஈன் பது.

பொறாமையானது பகைவரில்லாமலிருப்பவும் கேட்டைத் தருவது. ஆதலால் அப்பொறாமை உடையவர்க்கு கேட்டை வருவிப்பதற்கு(ப் பகைவர் வேண்டுவதில்லை.) அப்பொறா மையே போதும்.

கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்.

ஒருவனால் பிறர்க்குக் கொடுக்கப்படும் பொருளைக் குறித் துப் பொறாமைப்படுபவனது உறவானது உடுக்கும் உடையும் உண்ணும் உணவும் இல்லாமல் கெடும்.

அழுக்கற்று அகன்றாரும் இல்லை; அஃதில்லார்
பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல்.

பொறாமைப்பட்டுப் பெரிய செல்வராயினவர்களுமில்லை; பொறாமைப் படாதவர் பெரிய செல்வராயிருந்து அச்செல்வப் பெருக்கத்தினின்றும் நீங்கினவருமில்லை.

ஒருவர் ஒருவர் மரியாதையுடன் நடந்துகொள்ளவேண் டும். பட்டப் பெயர் வைத்து அழைப்பதும் கொச்சையான வார்த்தைகளைப் பயன்படுத்திக் கூப்பிடுவதும் ஆகாது. மரியாதையற்ற எதையும் சொல்லவும் செய்யவுங்கூடாது.

சகோதரர்கள் சகோதரிகள் மட்டில் அன்புள்ளவர்களா யிருக்கவேண்டும். பெண்கள் ஆண்களைப்போல் உடல் வலிமை யுள்ளவர்களல்லர். அவர்கள் இயற்கையாகவே முரட்டுத்தன மற்றவர்கள். அதிக அன்பு கொண்டவர்கள். அவர்களை இங்கிதத்துடன் நடத்தவேண்டும். எந்தப் பெண்ணிடமும் முரட்டுத்தனமாய்ப் பேசுவதும் நடந்துகொள்வதும் ஆண் மகனுக்கு அழகல்ல என்பர். அப்படியானால் உடன் பிறந்த சகோதரியிடம் அப்படி நடந்துகொள்ளலாமா?

வீட்டில் யாரேனுமொருவர் நோய்வாய்ப்பட்டால், ஏதா கிலும் சேதம் தோல்வி அனுபவித்தால் மற்றச் சகோதரர்களும்

சகோதரிகளும் அவர் மட்டில் தனியன்பும் அனுதாபமும் காட்டுவது முறை. தங்கள் நலத்தைக் கருதாது அவருக்கு ஆறுதலோ பணிவிடையோ செய்ய முன் வரவேண்டும்.

மூத்த பிள்ளையாய்ப் பிறந்தவர்களில் சிலர் தாங்கள் சர்வாதிகாரியென எண்ணி மற்றவர்களை அடித்து உதைத்து வதைத்துக்கொண்டிருப்பார்கள். இது தவறு. மூத்த பிள்ளையானதால், மற்றவர்களை அன்போடு அரவணைக்கவேண்டும்; மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாயிருக்க வேண்டும்.

## குறிப்பு

1. பெரியோர்களுக்கு மரியாதை செலுத்து. உட்கார்ந்திருந்தால் அவர்களைக் கண்டதும் எழுந்து நில்.

2. நாற்காலி, தவிசுப் பலகையில் உட்கார்ந்துகொண்டு கால்களை ஆட்டிக்கொண்டிராதே.

3. அவர்களோடு பேசும்போது அவர்களை உற்றுப் பார்க்காதே.

4. பெரியவர்களை 'நீ' என்று சொல்லாமல், என்றும் மரியாதையுடன் அழை.

5. பெரியவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போது, அவர்கள் அழைத்தாலொழிய நீ அங்கே போகாதே; அவர்கள் பேசிக்கொண்டிருப்பதை ஒற்றிக் கேட்காதே.

6. ஒற்றிக் கேட்கும் தீய வழக்கத்தை அறவே ஒழித்துவிடு.

7. பெரியோர்களுக்குப் பட்டப் பெயர் கொடாதே.

8. பெரியோர்களை வெளியிடங்களில் கண்டால் கண்டும் காணாதவன்போல் தலையைக் கவிழ்ந்துகொண்டு செல்லாதே.

9. அறைக்குள் பெரியவர்களிருந்தால் கதவைத் தட்டு. வெளியே நின்றுகொண்டு கனைக்காதே. மறுமொழி இல்லாவிட்டால் பேசாமல் திரும்பிவிடு. கதவைப் படார் படார் என்று உடைக்காதே. அவர்கள் உள்ளே இருக்கிறார்களாவென்று சன்னலில் ஏறிப் பார்ப்பதும் சாவித் துளையின் வழியாகப் பார்ப்பதும் மிகவும் அநாகரிகச் செயல்கள்.

10. பெரியவர்கள் நாற்காலியில் உட்காரச் சொன்னாலொழிய, நீயாக நாற்காலியை இழுத்துப்போட்டுக்கொண்டு உட்காராதே.

11. உத்தியோகஸ்தர்கள், மற்றவர்களைக் கண்டு பேசும்போது ஒற்றைக்காலில் நிற்காதே.




என் பிறன் யார்? பைபிளில் ஒரு கதையுண்டு.

ஒரு யூதன் செருசலேம் பட்டணத்திலிருந்து செரிக்கோ பட்டணம் செல்கிறான். வழியில் கள்வர் கையில் விழுகிறான். அவர்கள் அவனிடமிருந்த எல்லாவற்றையும் கொள்ளையடித்துக்கொண்டு, அவனை அடித்துக் காயப்படுத்திக் குற்றுயிராய் விட்டு ஓடிவிடுகிறார்கள்.

அவ்வமயம் அவ்வழியே யூதக் குரு வருகிறான். அவனைப் பார்க்கிறான்; தன் வழி செல்கிறான். திருப்பணிக்குரிய லேவித்தன் ஒருவன் வருகிறான். அவனைக் கண்டதும் ஒதுங்கிச் செல்கிறான். பிறகு ஒரு வழிப்போக்கன்—தாழ்த்தப்பட்ட குலத்தைச் சேர்ந்தவன் என்று கருதப்பட்ட—சமாரியன் வருகிறான்; அவனும் பார்க்கிறான். ஆனால் குற்றுயிராய்க் கிடக்கும் யூதனைக் கண்டபின்னர் தன் வழியில் போக மனம் வரவில்லை. அடிபட்டுக்கிடப்பவன் அருகில் செல்கிறான். காயங்களைக் கனிவுடன் துடைக்கிறான். எண்ணெய், திராட்சை இரசம் இவைகளைக் காயங்களில் ஊற்றுகிறான்; கவனமாய்க் காயங்களைக் கட்டுகிறான். பிறகு அவனைத் தன் வாகனத்தில் தூக்கிச் செல்கிறான். சத்திரத்துக்கு வருகிறான். சத்திரக்காரனிடம் இரண்டு தெனியர் நாணயங்களைக் கொடுத்து, 'இவனை நன்றாய்க் கவனித்துக்கொள்ளும், நான் திரும்பி வரும்பொழுது மீதியைக் கொடுத்துவிடுகிறேன்'—என்று கூறிச் செல்கிறான்.

ஆகையால் கள்வர் கையில் அகப்பட்டவனுக்கு இம் மூவரில் பிறன் யார் என்று கேட்டார் சேசுபிரான். அவனுக்கு உதவி புரிந்தவனே என்றான் ஒரு அறிஞன். நீயும் போய் அவ்விதமே செய் என்று சேசு கூறினார்.

ஒரே தெய்வம், ஒரே குலம். இது எவ்வளவு உண்மை! மக்களிடம் பல்வேறு வேறுபாடுகள் மலிந்து கிடக்கின்றன; குற்றங்குறைகள் குவிந்துநிற்கின்றன. பழக்க வழக்கங்களில், பண்பாடுகளில், செல்வத்தில், வண்ணத்தில், மொழியில், எத்தனை எத்தனையோ வேறுபாடுகள்! ஆனால் எத்தனை வேற்றுமையிருந்த போதிலும், மனிதன் என்ற முறையில் எல்லோரும் ஒருபடியானவர்களே! எல்லாரும் ஒரே கடவுளால் உண்டாக்கப்பட்டவர்களே! ஒரே கடவுளால் காப்பாற்றப் பட்டு வருகிறவர்களே! ஒரே கடவுளின் திருவடியை இறுதியில் அடைவதற்காக உலகில் உயிர் வாழ்கிறவர்களே! எல்லாரும் கடவுளின் மக்களே! எல்லாரும் ஒரே மனித குலத்தைச் சேர்ந்தவர்களே! இடம், காலம், அனைத்தையும் தாண்டி நிற்கும் சகோதர சகோதரிகளே!

கடவுள் நம் நல்ல தந்தை, அவருக்கு முன் அரசன் ஆண்டியென்றும், வெள்ளையன்–கறுப்பன் என்றும், முதலாளி பாட்டாளி என்றும், எஜமான் ஊழியன் என்றும், மேல் குலத்தான் - கீழ் குலத்தானென்றும் வேற்றுமை கிடையாது. இவையனைத்தையும் அவர் பொருட்படுத்துவதில்லை. அவர் கவனிப்பவை எல்லாம் நல்லவனா கெட்டவனா; அறச் செயலைச் செய்கிறவனா மறச் செயலைப்புரிகிறவனா (அதாவது தருமத்தை நாடுகிறவனா, அதருமத்தைக் கையாள்பவனா) என்பவை தான். சுருங்கச் சொல்லின் கடவுள் தமது திருவுள்ளப்படி மனிதன் வாழ்க்கை நடத்துகிறானா இல்லையா என்றுதான் கவனிப்பார்.

இந்திய மக்களாகிய நாம் இவ்வுண்மையை ஆழ்ந்தறிவது அவசியம். நமது இரத்தத்தோடு இரத்தமாய், எலும்போடு எலும்பாய் ஒன்றித்து ஊறிப்போய் நிற்கிறது சாதி மனப்பான்மை. கடவுளால் உண்டாக்கப்பட்ட மானிட குலத்திலே ஒரே பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்குள்ளே - ஒரே

நாடாகிய இந்திய நாட்டுப்பிள்ளைகள் நடுவில் தீண்டாமை என்று பெரும்பாலரைப் பிரித்துவைத்து, எல்லாவற்றிலும் விலக்கி வைத்து வந்தமை மிகப் பெரிய கொடுமை. கோயில் களில் கூட அவர்கள் நுழைந்து கடவுளுக்குப் பிரார்த்தனை செய்யக் கூடாது ; அவர்கள் வேதத்தையும் ஓதி அறிய லாகாது என்ற அளவிலேதான் அந்த மக்களிடமிருந்து மறைத்து வைக்கப்பட்ட வேதத்துக்கு 'மறை' என்னும் பெயர் வந்திருக்கிறது.

" மகாத்மா காந்தி அடிகள் தீண்டாமையை ஒழிக்க வேண்டுமென்ற பேரவாக் கொண்டிருந்தார்கள். தம் நல் லெண்ணத்தைக் காட்டும் பொருட்டுத் தோட்டிகளின் கால னியில் வசித்து வந்தார்கள். அவர்கள் விட்டுச் சென்ற அவ்வேலையைக் காங்கிரஸ் கட்சி செய்து வருகிறது. தீண் டாமை ஒரு நாளில், ஒரு ஆண்டில் ஒழிக்கக் கூடியது அன்று, அது சரித்திரத்திற்கு எட்டாத காலத்திலிருந்தே தோன்றி, ஆணிவேர் சல்லிவேர் விட்டு வளர்ந்து வந்ததால் இன்று அதை ஒழிக்க அரசாங்கமும் சான்றோரும் பகீரதப் பிரயத்தனம் செய்து வருகிறார்கள். சட்டத்தால் சமூகத்தின் இந்த எலும்புருக்கி நோயைத் தீர்த்துவிட முடியாது. மக்கள் மனம் மாறவேண்டும். "

ஹரிஜன மகா நாட்டில் பேரவைத் தலைவர் மேலே கூறி யிருப்பது போல் சட்டத்தால் இந்நோயைத் தீர்த்துவிட முடியாது. அன்பை அடிப்படையாகக் கொண்டு மனமாற் றத்தால் ஏற்படும் புரட்சியே நீடித்த உறுதியான பாரத சமுதாயத்தை உருவாக்க இயலும். மாணவர்களாகிய நாம் அன்றாட வாழ்க்கையில் எல்லாரும் நம் உடன் பிறந்தாரென நடந்து கொள்ளவேண்டும். பள்ளியிலும், மாணவ விடுதிகளி லும் விளையாட்டு இடங்களிலும் நாமெல்லாரும் ஒரு குலத் தைச் சார்ந்தவர்கள் என்று எண்ணிக் கலந்து பழக வேண்டும்.

அரசு தொட்டியை ஆட்டிவிடுகிறது ; அதே நேரத்தில் பிள்ளையைக் கிள்ளியும் விடுகிறது. சட்ட முறையில் சாதி

ஒழிப்புக்காக வருந்தி உழைக்கிறது; பொருளைத் தாராளமாய்ச் செலவு செய்கிறது. இதெல்லாம் பாராட்டுக்குரியதே. ஆனால் இன்னும் ஹரிசனருக்கென்று தனி விடுதிகள் வைத்து அவர்களைப் பிரித்துக் காட்டுகிறது. அவர்களுக்குப் பொருட் சலுகை காட்டும் சான்றுச் சீட்டுகளிலும், பதிவேடுகளிலும் பொதுவாய் ஹரிசனர் என்று எழுதுவதே அவர்களுக்கு விருப்பமில்லை; என்ன கிளை சாதி என்று கேட்பது அவர்கள் தாழ்ந்த மக்கள் என்பதை நினைவு படுத்துவதுபோல் தோன்று கிறது. ஆதலால் இந்த 'பிள்ளைவாள்', 'அய்யர்வாள்' முதலிய 'வாள்' களை வெட்டி எறிந்துவிட்டு பெயரை எழு தினால் நலம். அதிலும் ஒரு இடர் உண்டு. ஹரிசனர்களுக் குப் பொருள் உதவி செய்ய இயலாது. எல்லாரும் அந்தத் தனிச்சலுகையை நாடிவருவர்.

**சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்**
**நீதிவழுவா நெறிமுறையின்—மேதினியில்**
**இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்**
**பட்டாங்கில் உள்ளபடி.**

என்று ஔவைப் பாட்டி பாடியிருக்கிறார்கள். கொடுத்தவர் உயர் குலத்தினர்; கொடாதவர் இழிகுலத்தினர்; இவ்வகை யன்றி வேறு சாதியில்லை.

தீண்டா மக்கள் என்று கருதப்பட்டு வந்தோரை மேன் குல மக்கள் என்று சொல்லிக் கொள்வோர் எப்போதுமே மரி யாதையில்லாமல்தான் அழைக்கிறார்கள். அப்படி அழைப் பது தான் அவர்களுக்குண்டான மரியாதை என்று எண்ணு கிறார்கள். ஆறு வயதுப் பையன் தோட்டி வேலை செய்யும் நாற்பது வயதுள்ளவனைப் பார்த்து, 'அடே, அப்பா இல் லேடா, போடா' என்று தான் சொல்லுகிறான். இது சரியா? நமக்காகத் தாழ்ந்த தொழிலைச் சகிப்புத் தன்மையோடு செய்வ தாலே அவன் வயதுக்குண்டான மரியாதையையும் இழந்து விட வேண்டுமா?

**சமூக சேவை**

பள்ளி மாணவர்கள் சமூக சேவையில் சேர்ந்து உழைக்க வேண்டும். பள்ளி மாணவர்கள் வகுப்புப் பிள்ளைகளின்

நிலையை ஆராய்ந்தறிந்து அவர்களுக்கு உதவி செய்யலாம். பொருள் படைத்த பெரியவர்களின் பிள்ளைகளிடம் பொருள் திரட்ட வேண்டும். எளிய பிள்ளைகளுக்குப் புத்தகங்கள், காகிதம், பென்சில்கள் முதலியன அவர்கள் தேவைக்குத் தக்க வாறு வழங்கலாம். ஒரு சில மாணவர்கள் ஒரு நாளைக்கு ஒரு வேளை உணவு கூட வயிறாரச் சாப்பிட வகையற்றவர் களாயிருக்கக் கூடும். ஒரு பையன் வகுப்பில் தாழ்ந்த குர லில் வாசித்தான். அவனைக் கேலி செய்யும் முறையில் ஆசிரி யர் 'ஏண்டா, மத்தியானம் சாப்பிடவில்லை? உரக்க வாசிடா' என்றார். பையனின் விடை அவரை வியக்கச் செய்தது: 'வீட்டில் சாதமில்லை, மத்தியானம் ஒன்றும் சாப்பிடவில்லை!' இவனைப் போல் எத்தனை எளிய பிள்ளைகள் நமது நாட்டில் உள்ளனர்!

மாணவர்கள் விடுமுறை நாட்களில் கிராமங்களுக்குச் சென்று இன்னும் அறியாமையிலே மூழ்கியிருக்கும் நமது மக் களுக்கு ஞானத்தை ஊட்டி அறியாமையைப் போக்கலாம். தெருக்களை எவ்விதம் சுத்தமாய் வைத்துக் கொள்ள வேண்டு மெனக் காட்டலாம். கிணறுகளைச் சுற்றிச் சுத்தமாய் வைத்துக் கொள்ளுதல், வீடுகளுக்கு முன் சாக்கடைநீர் தேக்கம் கொள் ளாதபடி செய்தல் இவைபோன்ற பணிகளை ஆற்றலாம். ரோடுகள் போட உதவி செய்யலாம்.

### பிறர் பணியின் முக்கியத்துவம்

உலக முடிவில் தீர்வு நடக்கும். அந்தத் தீர்வு எதில் சார்ந்திருக்குமென்று சேசு பிரான் மக்களுக்கு வலியுறுத்திக் கூறியுள்ளார். "அவர் நல்லவர்களைப் பார்த்துச் சொல்வார்: என் தந்தையினால் ஆசீர்வதிக்கப் பெற்றவர்களே! வாருங்கள். உலகமுண்டானது முதல் உங்களுக்காகத் தயாரிக்கப்பட்டிருக் கும் இராச்சியத்தைச் சுதந்தரித்துக் கொள்ளுங்கள். ஏனென் றால் நான் பசியாயிருந்தேன், எனக்கு உணவு அளித்தீர்கள். நான் தாகமாயிருந்தேன், எனக்குக் குடிக்கக் கொடுத்தீர்கள். நான் பரதேசியாயிருந்தேன், எனக்கு உறைவிடம் கொடுத்தீர்

கள். நான் உடையின்றி இருந்தேன் ; எனக்கு உடை அளித் தீர்கள். நான் நோய்வாய்ப்பட்டிருந்தேன், என்னை வந்து விசாரித்தீர்கள். நான் சிறையிலிருந்தேன், என்னைப் பார்க்க வந்தீர்கள்.

அப்போது நல்லவர்கள் ஆண்டவனே ! நீர் எப்போது பசியாயிருந்தீர், நாங்கள் உணவு அளித்தோம் ? நீர் எப்போது தாகமாயிருக்க நாங்கள் குடிக்கக் கொடுத்தோம் ? நீர் எப் போது பரதேசியாயிருந்து நாங்கள் உங்களுக்குத் தங்க இடங் கொடுத்தோம் ? உடையில்லாத போது உமக்கு எப்பொழுது உடை கொடுத்தோம் ? எப்பொழுது நீர் நோயாயிருந்தீர் அல் லது சிறையிலிருந்தீர், நாங்கள் உம்மிடம் வந்தோம் ? என்று வியந்து கேட்பார்கள்.

சேசுபிரான் மறுமொழியாக ' எனது மிகச் சிறிய சகோ தரர்களாகிய இவர்களில் ஒருவனுக்கு நீங்கள் செய்தபோதெல் லாம் அதை எனக்கே செய்தீர்கள் ' என்று உண்மையாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்பார்.

புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல் அரிதே
ஒப்புரவின் நல்ல பிற.

தேவுலகிலும் இவ்வுலகிலும் உபகாரம் போன்ற வேறு நற் செயல்களைப் பெறுவது அரிது.

ஒப்புரவினுல் வரும் கேடு எனின் அஃது ஒருவன்
விற்றுக் கோள் தக்கது உடைத்து.

உபகாரஞ் செய்வதினுல் ஒருவனுக்குப பொருட் சேதம் வரும் என்று சொல்லுபவர்கள் இருப்பின், அச்சேதம் ஒரு வன் தன்னை விற்றாகிலும் வாங்குந் தகுதியை உடையதாகும்.

வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை மற்றுஎல்லாம்
குறி எதிர்ப்பை நீரது உடைத்து.

வறியவர்களுக்கு அவர் வேண்டிய ஒன்றைக் கொடுத்தலே ஈகையாகும் ; மற்ற எல்லாக் கொடையும் வட்டியை எதிர் பார்த்துச் கடன் கொடுத்தலை ஒக்கும்.

இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலன் உடையான் கண்ணே உள.

நான் வறியனென்று இரப்பவன் சொல்லும் இழிவுரையைப் பிறரிடம் தான் சொல்லாமலிருப்பதும், இரப்பவன் கேட்டதைக் கொடுப்பதும் நல்லகுடியிற் பிறந்தவனிடத்தில் தான் உண்டு.

**காந்தியடிகளும் மலைப்பிரசங்கமும்**

ஜோசப் டோக் என்பவர் காந்தியடிகளை நோக்கி, 'சத்தியாக்கிரக உணர்வு உங்களுக்கு எவ்விதம் வந்தது?' எனக் கேட்டார். "நான் குழந்தையாயிருந்த பொழுது பள்ளிக்கூடத்தில் வாசித்த வேளையில், ஒரு குஜராத் கவியின் ஒரு வாக்கியம் என் உள்ளத்தில் படிந்தது. 'ஒருவன் உனக்குக் குடிக்கத் தண்ணீர் கொடுத்தால் அதற்குப் பதிலாக நீ அவனுக்குத் திருப்பித் தண்ணீர் கொடுக்கிறாய். இதில் ஒன்றுமில்லை. தீமைக்கு மாறாக நலஞ்செய்வதில் உண்மை அழகுண்டு' என்னும் கருத்துள்ள வாக்கியம் அது. இக் கருத்து எனது குழந்தைப் பருவத்தில் என்னைத் தன் வயப்படுத்தினது. பிறகு, கிறிஸ்துநாதர் மலைமீது கொடுத்த அருள்மொழி என்னை ஆண்டது" என்று அடிகள் விடையளித்தார். ஜோசப் டோக் "பகவத் கீதையன்றோ முதலில் போந்திருத்தல் வேண்டும்?" என்று கேட்டார். அதற்குக் காந்தியடிகள்,

"இல்லை. சத்தியாக்கிரகத்தின் நேர்மையையும், பெருமையையும் உணர்த்தி, என்னை விழிக்கச் செய்தது புதிய ஏற்பாடே. கிறிஸ்துவின் மலைப்பிரசங்கத்தை நான் வாசித்த போது 'தீமையைத் தீமையால் எதிர்த்து நிற்கவேண்டாம். ஒருவன் உன்னை வலது கன்னத்தில் அறைந்தால், அவனுக்கு மறு கன்னத்தையும் திருப்பிக்கொடு' (மத். 5/39) என்பதையும், 'உங்கள் பகைவர்களைச் சிநேகியுங்கள், உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள். உங்களை உபத்திரவப்படுத்துகிறவர்களுக்காக வேண்டிக்கொள்ளுங்கள். இவ்விதம் செய்தால் பரலோகத்திலுள்ள உங்கள் பிதாவுக்கு ஏற்றப் பிள்ளைகளாயிருப்பீர்கள்" (மத். 5/44) என்பதையும் கண்ட

போது, நான் எல்லையில்லா மகிழ்ச்சியடைந்தேன். இவ்வெண்ணத்தை என்னுள்ளத்தில் பின்னர் பகவத்கீதை வலியுறுத்தியது" என்று கூறினார். (மத்தேயு சுவிசேஷம் 6-ம் அதிகாரம்)

**மலைப்பிரசங்கம்**

1. மனத்தரித்திரர் பாக்கியவான்கள்;
மோட்ச இராட்சியம் அவர்களுடையது.
2. சாந்த குணமுள்ளவர்கள் பாக்கியவான்கள்;
அவர்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொள்வார்கள்.
3. அழுகிறவர்கள் பாக்கியவான்கள்;
அவர்கள் ஆறுதலடைவார்கள்.
4. நீதியின்மேல் பசிதாகமுள்ளவர்கள் பாக்கியவான்கள்;
அவர்கள் திருப்தியடைவார்கள்.
5. இரக்கமுள்ளவர்கள் பாக்கியவான்கள்;
அவர்கள் இரக்கமடைவார்கள்.
6. தூய இருதயமுள்ளவர்கள் பாக்கியவான்கள்;
அவர்கள் சர்வேசுரனைத் தரிசிப்பார்கள்.
7. சமாதானம் பண்ணுகிறவர்கள் பாக்கியவான்கள்;
அவர்கள் தேவமக்கள் எனப்படுவார்கள்.
8. நீதியினிமித்தம் உபத்திரவப்படுகிறவர்கள் பாக்கியவான்கள்;
மோட்ச இராட்சியம் அவர்களுடையது.

* * * *

என்னைப்பற்றி மனிதர் உங்களைச் சபித்துத் துன்பப்படுத்தி உங்கள்மேல் சகல தீமையையும் அபாண்டமாய்ச் சொல்லும்போது, நீங்கள் பாக்கியவான்கள். அப்போது அகமகிழ்ந்து அக்களியுங்கள்; ஏனெனில் பரலோகத்தில் உங்கள் சம்பாவனை ஏராளமாயிருக்கின்றது.

நீங்கள் பூமியின் உப்பாயிருக்கிறீர்கள்; உப்பானது சாரமற்றுப்போனால் எதினால் சாரமாக்கப்படும்? இனி அது வெளியே கொட்டப்படுவதற்கும், மனிதரால் மிதிக்கப்படுவதற்குமேயன்றி, வேறொன்றுக்குமே உதவாது.

நீங்கள் உலகத்தின் ஒளியாயிருக்கிறீர்கள்; பருவதத்தின் மேலிருக்கிற பட்டணம் மறைவாயிருக்கமாட்டாது.

* * * *

நீ பீடத்தண்டையில் உன் காணிக்கையைச் செலுத்தும் பொழுது உன் சகோதரன் உன்மேல் ஏதோ மனத்தாங்கலா யிருக்கிறனென்று, அங்கே நினைவு கூர்வாயாகில, உன் காணிக்கையை அங்கே பீடத்தின் முன்பாக வைத்துவிட்டு, முந்த உன் சகோதரனேடு உறவாடப் போ; பின்பு வந்து உன் காணிக்கையைச் செலுத்துவாயாக.

* * * *

விபசாரம் பண்ணுதிருப்பாயாகவென்று பூர்வீகத்தாருக் குச் சொல்லப் பட்டதாகக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். நானே உங்களுக்குச் சொல்லுகிறேன்: ஒரு பெண்ணை இச்சிக்கும்படி அவளை நோக்குகிற எவனும் தன் இருதயத்தில் அவளோடு விபசாரம் செய்தாயிற்று.

உன் வலது கண் உனக்கு இடறலாயிருந்தால், அதைப் பிடுங்கி அதைத் தூர எறிந்துபோடு. ஏனெனில் உன் உடல் முழுதும் நரகத்தில் தள்ளப்படுவதைவிட உன் அவயவங்களில் ஒன்று சேதமாய்ப்போவது உனக்கு நலமாம்.

கண்ணுக்குக் கண்ணும், பல்லுக்குப் பல்லும் என்று சொல்லக் கேட்டிருக்கிறீர்கள். நானே தீமைக்கு எதிர்த்து நிற்கவேண்டாமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகை யால் ஒருவன் உன்னை வலது கன்னத்தில் அறைந்தால் அவனுக்கு மறு கன்னத்தையுந் திருப்பிக்கொடு.

உன் பிறனைச் சிநேகித்து உன் சத்துராதியைப் பகைப் பாயாகவென்று சொல்லக் கேட்டிருக்கிறீர்கள். நான் உங்க ளுக்குச் சொல்லுகிறேன்: உங்கள் பகைவர்களைச் சிநேகி யுங்கள். உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்புங்கள். உங்களை உபத்திரவப் படுத்துகிறவர்களுக்காகவும் உங்கள் பேரில் அபாண்டஞ் சொல்லுகிறவர்களுக்காகவும் வேண்டிக் கொள்ளுங்கள்.

* * * *

# 2×2 = 4 உண்மை

சைரஸ் என்னும் பெர்சியா மன்னனிடம் அவர் முதன் முதலிற் கற்றதென்னவென்று ஒருவர் கேட்டார். அவர் சொன்ன பதில் மிகவும் போற்றத்தக்கது: 'உண்மை உரைக்கவே எனக்குக் கற்றுக்கொடுத்தனர்' என்றார். மெய்யாகவே நாம் அனைவரும் உண்மை பேசவேண்டும்.

நாவானது ஒரு சிறு உறுப்பே. ஆனால் அது அரும் பெருங் காரியங்களை ஆற்றவல்லது. ஒருவரைப் புகழ்வதும் அந்நாவுதான்; ஒருவரை இகழ்வதும் அந்நாவுதான். கடவுளைத் துதிப்பதும் அதனால்தான்; அவரை நிந்திப்பதும் அதனால்தான். நாவினால்தான் உண்மையை உரைக்கின்றோம்; அதே நாவினாலேயே பொய்யையும் சொல்லுகின்றோம். நன்மைக்கும் தீமைக்கும் இருமுனை கூரிய கத்திபோல் பயனாகிறது. ஆகையால் வெகு கவனமாயிருந்து என்றும் உண்மை உரைப்பதற்கே நாவை நாம் பயன்படுத்தவேண்டும்.

**உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்**
**உள்ளத்துள் எல்லாம் உளன்.**

ஒருவன் தன் மனதுக்கேற்பப் பொய் பேசாமல் நடப்பானாகின், அவன் உயர்ந்த மக்களின் மனங்களில் இடம் பெறுவான்.

**மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு**
**தானம் செய்வாரில் தலை.**

ஒருவன் மனத்தொடு பொருந்தி உண்மையைச் சொல்லுவானாயின், அவன் தவத்தையும் தானத்தையும் ஒருங்கே செய்வாரினும் சிறப்புடையவனாவான்.

**புறந்தூய்மை நீரான் அமையும்; அகந்தூய்மை**
**வாய்மையால் காணப்படும்.**

நீரினால் மட்டுமே ஒருவனுக்கு உடல் தூய்மை உண்டாவதுபோல, உண்மை ஒன்றினால் மட்டுமே ஒருவனுக்கு மனத் தூய்மை உண்டாகும்.

**எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்**
**பொய்யா விளக்கே விளக்கு.**

வெளி இருளை நீக்கும் விளக்கெல்லாம் சான்றோருக்கு விளக்கல்ல; உள்ள இருளை நீக்கவல்ல உண்மை பேசுவதே சான்றோர் மதிக்கும் விளக்கு ஆகும்.

**யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்**
**வாய்மையின் நல்ல பிற.**

நாம் மெய்யான நூல்களாக அறிந்த நூல்களுள் உண்மையைவிட மேலான அறங்கள் இல்லை.

உண்மைக்கு மாறாகப் பேசுவது பொய். மற்றவர்களை ஏமாற்றுங் கருத்தோடு மனதிலிருக்கும் உண்மைக்கு மாறாகச் சொல்லும்போது, செய்யும்போது அதைப் பொய் என்கின்றோம். ஒரு பையன் பள்ளிக்குப் பிந்தி வருகிறான். 'ஏன் பிந்திவந்தாய்'? என்கிறார் ஆசிரியர். பையன் கொடுக்கும் பதில் என்ன? ஆசிரியரை ஏமாற்றுங் கருத்தோடு, தான் ஊர் சுற்றினதை மறைத்து, 'தாயாருக்கு மருத்துவ விடுதியிலிருந்து மருந்துவாங்கிக் கொடுத்துவிட்டுவர நேரமாயிற்று' என்கிறான். இது சரியான பச்சைப் பொய்.

பொய்யிலே கேலிக்காகச் சொல்லும் பொய் என்று ஒன்று உண்டு, அவன் சொல்வது உண்மையல்ல, விளையாட்டுக்கு என்று அனைவருக்கும் தெரியும். ஆனதால் இது பாவமான பொய் அல்ல. தமாஷ் என்று ஒருவன் தாவிக் குதித்து மூக்குக் கண்ணாடியை உடைக்கவைத்தால், இது சரியா? 'பாம்பு' என்றால் ஒருவனுக்குப் பாதி உயிர் போய்விடும். அவன் படித்துக்கொண்டிருக்கும்போது 'பாம்பு' என்றால், அவன் என்ன அவஸ்தைப்படுவான்? வேடிக்கை சரி, அதற்கும் அளவு உண்டல்லவா?

முகத்துதியும் ஓர்வகைப் பொய்யே. குறிப்பாய் இக் காலத்தில் தாராளமாய்ப் பயன்படுத்தப்படுகிறது. நகரசபைத் தலைவர் பள்ளிவிழாவில் கலந்துகொள்கிறார். சொற்பொழிவு ஆற்றுகிறார். அவர் பேசினது ஒருவருக்குமே புரியவில்லை. அவருக்காகிலும் புரிந்ததா? கடவுளுக்குத்தான் வெளிச்சம்! கூட்டம் முடிகிறது. நன்றிகூறல் படலம் வருகிறது. பள்ளி மாணக்கர்களின் தலைவன் அவர் சொற்பொழிவைக் கேட்டு

முன்னரே எழுதிப்படித்திருந்த வார்த்தைகளை அடுக்குகிறான். 'உங்கள் சொற்பொழிவு அருமை வாய்ந்தது. இதுவரையிலும் இதைப்போல் யாரும் பேசினதே இல்லை' என்கிறான். அவரோ இந்த முகத்துதியை ஏற்றுக்கொண்டு, அசடுவழிய அத்தனை பற்களையும் காட்டுகிறார்.

மிகைப்படச் சொல்லுதல் பொய்பாயிருந்த போதிலும் அதெல்லாம் அணியாகக் கருதப்படும். 'அவர் சொற்பொழிவைத் தொடங்கிய உடனே, என்ன அமைதி! ஒரு கடுகு விழுந்திருந்தாலும் அதன் ஒலி கேட்டிருக்கும்!' என்பர். இது குற்றமல்ல.

ஆனால் பிறருடைய பேருக்கோ, பொருளுக்கோ சேதம் வருவிக்கும் நோக்கோடு சொல்லும் பொய் அல்லது செய்யும் பொய்யான செயல் மிகப் பொல்லாதது, பாவமானது. ஒரு பையன் தாளில் எழுதிவந்து, அதைப் பார்த்துத் தேர்வில் எழுதிவிட்டு, அத்தாளைக் கசக்கி அடுத்தவன் பக்கத்தில் எறிவது எவ்வளவு குற்றமான செயல்! ஒருவன் பேனாவைத் திருடிவிட்டு, மாசற்ற பையன் ஒருவனைக் காட்டிக்கொடுப்பது எவ்வளவு பாவமான செயல்!

பொய்சொல்லும் வழக்கமே நம்மிடம் இருக்கலாகாது. பொய்சொல்வது கோழைகளின் குணம். அஞ்சும் தன்மையினர் எடுத்ததற்கெல்லாம் பொய் சொல்வார்கள். தண்டனைக்கு அஞ்சியே அப்படிப் பேசுவார்கள். மேலும் பொய்யனை ஒருவனும் நம்பமாட்டான். பொய்சொல்வது தவறானதல்ல என்று மட்டும் நாம் ஏற்றுக்கொள்வோமானால் சமூகம் சீரழிந்துவிடும்; ஒருவரை ஒருவர் நம்பவே முடியாது; கூட்டு வாழ்வே கூடாத காரியமாய்விடும்.

சமூக வழக்கங்கள் இருக்கின்றன. அவைகளின்படி நடக்கும்போது பொய் என்று எண்ணலாகாது. ஒரு பிச்சைக்காரன் தர்மம் கேட்கிறான். சிறுவனிடம் தாய் சொல்லியபடி 'வீட்டிலே ஒருவருமில்லை' என்கிறான். அதற்குப் பொருளென்ன? வீட்டில் ஆள் இல்லையென்று அல்ல; தர்மம் போடுவதற்கு ஆள் இல்லை என்றுதான் பொருள். அது போலவே ஆங்கிலத்தில் (not at home) 'வீட்டிலில்லை'

என்பார்கள்; பலகையில் எழுதியும் தொங்கும். அதாவது இப்போது உன்னோடு உரையாட அவருக்கு நேரமில்லை என்பதுதான் பொருள்.

(யார் நம்மை என்ன கேள்வி கேட்டாலும் நாம் அவர்களுக்கு உண்மையை உரைக்க வேண்டுமென்று கடமையில்லை; மழுப்பலாம், பேச்சை மாற்றலாம், மறுக்கலாம். என் தமக்கையை மணக்க விரும்பிய ஒருவன் மறைமுகமாய் என்னிடம் தகப்பனின் சொத்து, வருவாய் இவைகளைக் கேட்கும்போது நான் எனக்குத் தெரியாது என்று சொல்வது பொய்யாகாது. எனக்குச் சொல்லக் கடமையில்லை. ஒரு மருத்துவரிடம் போய் எனக்கு எவ்விதத்திலும் சம்பந்தமில்லாத ஒரு நோயாளியின் நோயைப்பற்றிக் கேட்கிறேன். அவர் 'ஒன்றுமில்லை, நன்றாய்த்தான் இருக்கின்றான்' என்று சொன்னாலும் அது பொய்யாகாது.)

**இரகசியங்கள்**

(நமது தொழிலின் இயல்பாலோ அல்லது ஒருவர் நம்மிடம் சொன்னதாலோ நாம் இரகசியங்களைக் காக்கக் கடமைப்பட்டிருக்கின்றோம். இரகசியங்களைக் காப்பாற்றாவிடில், பொதுநலமும் பிறர்நலனும் பெரிதும் பாதிக்கப்படும்.)

மருத்துவர்கள், நர்ஸுகள், வழக்கறிஞர்கள், முதலியோர் தாங்கள் தனிப்பட்ட மனிதரென்ற முறையில் இல்லாமல், அலுவலின் காரணமாக இவ்வுண்மைகளை அறிந்துகொள்ளுகிறார்கள். ஆனதால் அவர்கள் வெளிப்படுத்தலாகாது. எனக்குத்தெரியாது என்று சொல்லிவிடலாம். அப்படி அவர்கள் சொல்லும்போது, கேட்டவர்கள் தாங்கள் கேட்டிருக்கக்கூடாதென்றுதான் எண்ணுவார்களே தவிர, அவர்கள் பொய் சொல்லுகிறார்களென்று எண்ணமாட்டார்கள்.

தற்செயலாய் நாம் கண்டறிந்த இரகசியத்தை வெளிப்படுத்துவது குற்றமாகும். கொலைவழக்கில் அகப்பட்டுச் சிறைச்சாலையில இருந்தவன் விடுதலையுற்று தன் சொந்த ஊரைவிட்டு விலகி, நமது ஊருக்கு வந்திருக்கிறான். கண்ணியமாய்க் குடும்பத்தை நடத்தி வருகிறான். அவனுடைய பழைய வரலாறு என்னைத்தவிர யாரொருவருக்கும் தெரியாது. ஏதோ

தற்செயலாய் எனக்குத் தெரியவந்தது. நான் அதை வெளிப்படுத்தலாமா? கூடாது. இதை இரகசியமாய்க் காப்பாற்ற எனக்குக் கடமையுண்டு.

மற்றவர்கள் நம்மிடம் சொல்லும் இரகசியங்களை நாம் காப்பாற்ற வேண்டுமென்று நமக்குச் சொல்லாமலே விளங்கும். நம்மிடம் வாக்கு வாங்கிக்கொண்டு நம்மை நம்பி ஒருவன் ஓர் காரியத்தை இரகசியமாகக் காப்பாற்றும்படி கேட்டுக்கொள்ளுகிறான். இது ஒரு உடன்பாட்டுக்குச் சமம். ஆனதால் இரகசியத்தை வெளியிடுதல் உடன்பாட்டை முறித்தது போலாகும்.

தவறான முறைகளில் நாம் கண்டறிந்த இரகசியங்களையும் நாம் வெளிப்படுத்தக்கூடாது. சிலர் ஒட்டுக் கேட்பார்கள். இது அற்பத்தனம். சிலர் கள்ளத்தனமாய் மற்றவர்களுக்கு வந்த கடிதத்தை வாசிப்பார்கள், இது மடத்தனம். இதெல்லாம் தவறான, குற்றமுள்ள வழிகள். இருந்தும், நாம் அறிந்த இரகசியங்களை வெளிப்படுத்தக்கூடாது.

இரகசியங்களை ஒரு போதுமே வெளிப்படுத்தக் கூடாதா? சில வேளைகளில் வெளிப்படுத்துவது அவசியமாயிருக்கலாம். ஒரு தொத்து நோய்க்காரன் பயணம் செய்யப் பிடிவாதம் செய்தால் பொது நலத்தை முன்னிட்டு இதை அறிந்த மருத்துவர் அதிகாரிகளிடம் தெரிவித்து அவன் பயணத்தைத் தடுக்கலாம். மாசற்ற ஒருவனைக் காப்பாற்றும் வண்ணம் சில சமயங்களில் நாம் இரகசியத்தை வெளிப்படுத்தலாம். மணமாகிய ஒருவன் மனைவியைத் தள்ளி வைத்திருக்கிறான். வேறோர் ஊருக்குச் சென்று மணமாகாதவனைப் போல் நடித்து மாசற்ற ஒரு பெண்ணை மணஞ் செய்ய முயற்சிக்கிறான். இரண்டு பெண்களின் வாழ்க்கையைப் பாழ்படுத்தினது போலல்லவா? இதை அறிந்த நான் அப்பெண்ணின் பெற்றோரிடம் அல்லது அப்பெண்ணிடம் தெரிவிக்கலாம். ஒவ்வொரு வேளைகளில் என்ன செய்வதென்று தெரியாமல் நாம் திகைக்கும் போது, நாம் அறிந்த இரகசியத்தை நம்பிக்கையுள்ள ஒருவரிடம் சொல்லி ஆலோசனை கேட்கலாம். ஆனால் அவர் கேட்ட இரகசியத்தைக் காப்பாற்ற அவருக்குக் கடமையுண்டு.

# களவு



ஒவ்வொருவனுக்கும் தான் சம்பாதித்த சொத்தை வைத்துச் சுகிக்கவோ, நன்கொடையாகக் கொடுக்கவோ உரிமையிருக்கிறது. அதை நாம் அநியாயமாய் அபகரிக்கும் போது, கடவுளின் திருவுளத்துக்கு எதிராய் நடக்கிறோம்; தவறான காரியத்தைச் செய்கிறோம்.

மற்றவர்களுடைய பொருளை இரகசியமாய் எடுப்பது களவு. ஒருவன் மற்றொருவன் இல்லாத வேளை பார்த்து, அவனுடைய ஊற்றுப் பேனாவை எடுத்து மறைத்துவிடுதல், காசுகளை எடுத்தல், புத்தகத்தை எடுத்து மறைத்துக் கொள்ளுதல் போல்வன தகாத செயல்களாம்.

வலுக் கட்டாயத்தைப் பயன்படுத்திப் பொருளைப் பறிப்பது கொள்ளை. வழிமறித்துக் கொள்ளை அடிப்பது கொடியோர் செயல். பள்ளிப் பிள்ளைகளிலும் சில கொள்ளையர் இருக்கின்றனர். பெரிய பிள்ளைகள் தொடக்கப்பள்ளிப் பிள்ளைகளை அச்சுறுத்திக் காசு அல்லது பென்சிலைப் பறித்துக் கொண்டு மறைந்து விடுதல் இவர்கள் செய்யும் கொள்ளையாகும்.

சேதப்படுத்தும் நோக்கோடு பிறர் சொத்தைச் சேதப்படுத்துவது களவினும் கொடிய காலித்தனம். களவாவது திருடுபவனுக்கு லாபம் தரும் செயலாகக் கருதப்படுகிறது. இது ஒருவருக்கும் நன்மை கருதாத செயல். கண்ணாடிச் சன்னல்களில் கல்லெறிந்து அவைகளை உடைத்தல், பெஞ்சிலுள்ள சாய்மானத்தைப் பழுதுபடுத்துதல், நாற்காலியை முக்காலியாக்குதல், தெருவிளக்குகளில் கல்லெறிதல் இவை

நல்ல குடும்பத்துப் பிள்ளைகள் செய்யும் செயல்களல்ல, கீழ் மக்களுடைய செயல்களே. இத்தகைய காலித்தனம் செய்யும் மாணுக்கர்கள் பள்ளியிலிருந்தால், பள்ளிக்கும் தான் இழிவு; அவர்களை நீக்கிவிடுவது தான் சரி.

(சுத்தச் சரக்கென்று சொல்லிக் கலப்புச் சரக்கை விற்பது, உடன்பாட்டில் சில முக்கிய விஷயங்களை மறைப்பது, பள்ளிக் கூடச் சம்பளம் என்று பொய்சொல்லி வீட்டில் பணம் வாங்குவது, புத்தகத்துக்குப் பணம் என்று வாங்கிப் புதுப் படம் பார்க்கப்போவது — இவை எல்லாம் களவின் வகைகளே யாகும்.)

**எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்து ஒன்றும்**
**கள்ளாமை காக்கதன் நெஞ்சு.**

முத்தியை விரும்புகிறவன் இவன் தான் என்று மதிக்கப் படக் கூடியவனுக விரும்பினுல் பிறரை வஞ்சித்து யாதொரு பொருளையும் அபகரிக்க நினையாதபடி தன் நெஞ்சைக் காக்க வேண்டும். (களவு செய்ய நினைத்தலும் களவுக் குற்ற மேயாகும்.)

**உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன் பொருளைக்**
**கள்ளத்தால் கள்வேம் எனல்.**

குற்றங்களைத் தமது நெஞ்சிலே நினைத்தாலும் பாவமே. ஆதலால் பிறருடைய பொருளை அவரறியாத வகையில் வஞ்சித்துக் கொள்வோம் என்று நினையாதிருக்கக்கடவார்.

**களவின் கண் கன்றிய காதல் விளைவின் கண்**
**வீயா விழுமம் தரும்.**

திருடுவதில் மிகுந்த ஆசையானது (அப்போது இனிது போல் தோன்றி) தனது பயனைக் கொடுக்கும்போது தொலையாத துன்பத்தைக் கொடுக்கும்.

திருடுவது மட்டுமல்ல ; பிறர் நியாயமான முறையில் முன்னேறுவதையும் உழைத்துச் சம்பாதிப்பதையும் நாம் கெடுப்பதும் அடாத செயல். நம்மிடம் வேலை பார்ப்பவர்

களுக்கு முறையோடு முழுச் சம்பளத்தையும் கொடுக்கத் தவறக்கூடாது.

சிலர் கடன் வாங்குவார்கள். கொடுத்த வாக்குப்படி திருப்பிக் கொடுக்கமாட்டார்கள். பெரியவர்கள் மட்டுமல்ல. பள்ளிப்பிள்ளைகள் சிலர் 'நாளைக்கே கொடுத்துவிடுகிறேன்' என்று பகல் காட்சிக்குப் போக நண்பனிடம் 75 பைசா கடன் வாங்குவார்கள். அதை மாதக் கணக்காய்த் திருப்பிக் கொடாமலிருப்பர். இது சரியல்ல.

நாம் கீழே கண்டெடுத்த பொருள்களை என்ன செய்வது? சிலர் பேனாவைத் தொலைத்தவன் தேடுகிறதைப் பார்த்தும் அதைக் காலால் மறைத்துக் கொண்டு அங்கேயே நிற்பவர்கள். அப்படி மறைத்து எடுத்துக்கொண்டு போவது களவே. நீ கீழே ஒரு பொருளைக் கண்டெடுத்தால், பள்ளி எல்லையா யிருந்தால் தலைமை ஆசிரியரிடம் கொண்டுபோய்க் கொடு. அவர் யாருடையது என்று விசாரித்துக் கொடுத்துவிடுவார். நீ வெளியே கண்டெடுத்தால், யாருடையதென்று தெரிந்தால் பொருளின் சொந்தக்காரனிடம் கொடுத்துவிடு. தெரியா விட்டால் நீ வைத்துப் பயன்படுத்து. ஆனால் உடைமைக் காரன் கேட்கும்போது கொடுக்கத் தயாராயிருக்க வேண்டும். பணமாயிருந்தால் தர்மம் செய். நீ எளியவனாயிருந்தால் நீ பயன்படுத்திக்கொள். பெரிய தொகையாயிருந்தால் பெரியவர் களைக் கலந்து ஆவனதைச் செய்.

மற்றவர்களுடைய பொருள் நம்மிடத்திலிருந்தால் அதை நாம் கருத்துடன் காப்பாற்றித் திருப்பிக்கொடுக்கவேண்டும். இரவலாய் வாங்கின பொருட்களை நாம் கவலையற்ற மனப் பான்மையோடு சேதப்படுத்தக்கூடாது. கணக்கு நோட்டை இரவல்வாங்கி அதற்கு எண்ணெய்முழுக்காட்டித் திருப்பிக் கொடுத்தால் அவன் அதை வைத்துக்கொண்டு என்ன செய் வான்! ஆசிரியரிடம் 'பாட்டு' வாங்குகிறான்.

மற்றவர்களுடைய பொருளைத் திருடியிருந்தால் நாம் அதைத் திருப்பிக் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். அதுபோல் நம்மால் நேர்ந்த சேதத்துக்கு ஈடும் செய்தாக

வேண்டும். நாம் அந்தப் பொருளை இழந்து விட்டால் அதற்குப் பதிலாகப் பொருளோ, பணமோ கொடுப்பது அவசியம். நான் ஒருவனுடைய ஆங்கிலப் புத்தகத்தை வாங்கித்தொலைத்து விட்டேன். தொலைந்து போய்விட்டது என்றால் போதுமா? அதற்குண்டான விலையைக் கொடுக்க வேண்டும்; புது புத்தகம் வாங்கிக் கொடுத்தல் அதனினும் நலம்.

களவுப் பொருட்களை நாம் விலைக்கு வாங்கக்கூடாது.

வட்டி :

பணத்தை வட்டிக்கு, குறைந்த வட்டிக்கு, நியாயமான வட்டிக்குக் கொடுப்பது தவறில்லை. ஆனால் சிலர் குண்டர்களைப்போல் பணப்பித்துப் பிடித்து ரூபாய்க்கு 6 பைசா 12 பைசா வட்டி வாங்குவார்கள். கடன் வாங்கினவன் முதலைப் போல் மூன்று மடங்கு வட்டியாகக் கட்டியிருப்பான்; முதல் எங்கே என்று அவர்களை வதைப்பார்கள். எளியவனுடைய வீடுவாசல் அனைத்தையும் ஏலத்தில் விடுவார்கள். இவ்வித அநியாய வட்டி வாங்குவது கடவுளுக்குத்தான் அடுக்குமா? இவ்விதம் எளியன் இரத்தத்தை உறிஞ்சி வாங்கும் காசு அவனுக்கும் அவன் பிள்ளைகளுக்கும் எத்தனை நாள் பயன்படும்? அநியாயம்!

## குறிப்பு

1. திருட்டு வழக்கத்தை அறவே ஒழிக்க வேண்டும். எவ்வளவு சொற்பப் பொருளாயிருந்தாலும் திருடாதே. பல நாள் திருடன் ஒரு நாள் அகப்படுவான்.

2. எவ்வளவு சிறிய பொருளையும் உடையவனது அனுமதியோடு எடுத்துப் பயன்படுத்து. உன் வீட்டிலும் பலகாரம் பட்சணங்களைத் திருடித் தின்னும் வழக்கத்தை விட்டு விடு.

3. பற்பல காரணங்களைச் சொல்லிப் பெற்றோரை ஏமாற்றிப் பணம் வாங்காதே.

4. ஏதாகிலும் ஒரு பொருள் கீழே கிடந்தால், அதை உடையவனிடம் கண்டுபிடித்துக் கொடுக்க முயற்சி செய். பள்ளிக்கூட இடங்களில் கிடந்தால் அதைத் தலைமை ஆசிரியரிடம் கொடு.

5. இரவல் வாங்கின புத்தகங்களை, நோட், 'நோட்ஸ்' இவைகளைக் கெடுவோடு பத்திரமாய்த் திருப்பிக் கொடு.




பணம், பணம் என்று பணப்பித்துப் பிடித்து ஒரு சிலர் வியாபாரத்தில் எல்லாம் செய்யலாம், எப்படியும் சம்பாதிக்கலாம், நியாயம் அநியாயம் கிடையாதென்பது போல் நடக்கிறார்கள். ஆனால் வியாபாரத்திலும் உண்மையும், நேர்மையும், நீதியும் அவசியம்; அடிப்படைக் கொள்கைகளுண்டு.

**வியாபாரிகள் அறியவேண்டியவை :—**

1. மனிதனைத்தவிர மற்ற எல்லாப் பொருட்களும் மனிதனின் உபயோகத்துக்காக உண்டாக்கப்பட்டவை.

2. இப்பொருள்களெல்லாம் மனிதனின் தேவைக்கு உதவுமென்றதால்தான் தனிச்சொத்துரிமை ஆதரிக்கப்படுகிறது.

3. தான் இழந்துபோனலன்றி, அல்லது தனது உரிமையைக் கொடுத்துவிட்டாலன்றி, ஒவ்வொருவனுடைய சொத்தும் அவனுடையதே.

பண்டமாற்றுதல் : ஒரு பொருளுக்கு வேறு பொருளை வாங்குகிறோம்; அல்லது ஒரு தொகையைக் கொடுக்கிறோம். கைபிடி அரிசியைக் கொடுக்கிறோம்; ஒரு கட்டுக் கருவேப்பிலை கொத்தமல்லி வாங்குகிறோம். 50 பைசாவைக் கொடுக்கிறோம்; ஒரு நோட் புத்தகம் வாங்குகிறோம். ஒரு பொருளை அதிக லாபம் வருகிறது என்று உயர்ந்த விலைக்கு விற்பது நியாயமல்ல. ஒரு கூலிக்காரன் ஒரு வண்டி மணல் அள்ளிக் கொட்டினதற்காக 5 ரூபாய் கேட்டால், நாம் அநியாயம் என்று சொல்வோமல்லவா ?

சில வியாபாரிகள் போட்டியினால் மற்றவர்களை வியாபாரத் துறையில் நசுக்குவார்கள், சரக்குகளை வெகு வெகு குறைந்த விலைக்கு விற்பார்கள். எளியோர் மட்டில் வைத்த அனுதாபத்தால் அல்ல; சமூக நலனுக்காகவல்ல; மற்ற வியாபாரிகளைக் கவிழ்ப்பதற்கு. பல தொழில் உற்பத்தியையும் தாங்களே வாங்கிக் கொண்டு, வியாபாரத்தில் ஏகேச் சாதிகாரம் கொள்வார்கள். மற்ற வியாபாரிகள் தொழில் நடத்த முடியாமல் விலகினதும், தாங்களே இஷ்டத்துக்கு அதிக விலைக்கு விற்பார்கள். இத்தகைய வியாபாரப் போட்டி நியாயமானதல்ல.

சில வியாபாரிகள் அதிக விலைக்குப் பொருள்களை விற்பார்கள். வாழ்க்கைக்கு மிக மிக அவசியமான தானியம், உடை முதலியவைகளைக் கூட எத்தனை அநியாய விலைக்கு விற்பார்களென்றால், நடுத்தர மக்கள் முதலாய் வாங்கும் திறமையற்றிருப்பார்கள். ஒரு மழை தூறினால் நெல்விலை இறங்கும்; பல நாட்கள் மழை நின்றால் விலை நஞ்சு போல் ஏறும். சிலர் மூட்டை மூட்டையாகத் தானியங்களைப் பதுக்கி வைத்திருப்பார்கள். சந்தையில் சரக்கு இல்லையென்று அறிந்ததும், அபார விலைக்கு விற்க முன் வருவார்கள். இது நியாயமா? பொதுநலச் சேவையா? அவர்கள் இலாபம் அடைய உரிமையுண்டு. ஆனால் ஒரு பொருள் குறைந்ததால் அதிக உயர்ந்த லாபம் அடையப் பிரயாசைப்படுவது ஒழுங்கல்ல.

யுத்த காலத்திலும், நெருக்கடி சமயத்திலும் நியாய விலையைச் சர்க்கார் பார்த்து நிர்ணயிக்கிறது. இச்சமயத்தில் அநியாய இலாபம் அடைய விரும்பிக் கடைக்காரர்கள் சரக்கு இல்லையென்பார்கள். அல்லது நியாய விலைக்குக் கச்சாத்துக் கொடுத்துவிட்டு, அநியாயமாய் வாங்கிக் கொட்டிக் கொள்வார்கள். கச்சாத்தில் ரூ. 5 என்று கண்டிருக்கும்; ஆனால் பெற்ற ரொக்கம் 15 ரூபாய். இதைப்போல் கள்ள மார்க்கெட்டில் கொள்ளை அடிக்கும் சொத்து எத்தனை நாளைக்கு இவர்களிடம் தங்கும்? மக்களின் வறுமையையும்

அவர்களுடைய தேவையையும் அலட்சியம் செய்து, தன் நலத்தை நாடிப் பணத்தைத் தேடிவைப்பது முறையா ?

சிலர் பொய் எடைகளை வைத்தும், குறைந்த அளவு கோலை வைத்தும் இலாபம் சம்பாதிப்பார்கள். ஒரு அடி அளவுகோல் என்று கடைக்காரன் காட்டுவான். நாம் பள்ளியில் உபயோகிக்கும் அளவுகோலுக்கு $\frac{1}{2}$ அங்குலம் குறையும். ஒரு அடிக்கு $\frac{1}{2}$ அங்குலம் என்றால் 100-க்கு எத்தனை ஆகிறது ! தராசின் ஒரு பக்கத்துத் தட்டிலேயேதான் எடைக் கல்லைப் போடுவான். அடுத்த தட்டில் மாற்றிப் போடச் சொன்னால் கடைக்காரன் மறுப்பான். காரணம்? தராசு சரியானதல்ல! இவ்விதம் இலாபம் சம்பாதிப்பது நியாயமான வழியல்ல, தப்பிதம்.

அரசாங்கம் சட்ட ரீதியில் இவ்வித அநீதிகளைத் தண்டிக்கலாம். இக்குறைகளைப் போக்குவதற்காக குறிக்கப்பட்டிருக்கும் உத்தியோகஸ்தர் லஞ்சம் வாங்கிக் கொண்டு இவ்வூழல்கள் சமூகத்திலிருக்கச் சம்மதிக்கக்கூடாது.



# நற்பெயர்




நாம் ஒவ்வொருவரும் சமூகத்தில் நல்ல பெயருடன் வாழ நமக்கு உரிமையுண்டு. ஆனதால் நமது விவேகமற்ற தன்மையாலும், யோசனையற்றத் தன்மையாலும் மற்றவர்களுடைய பெயரைக் கெடுக்கக் கூடாது. கோள், ஆவலாதி, புறணி, பொய்ச்சாட்சி இவை முதலியவைகளால் பிறருடைய நல்ல பெயரை நமது நாவாகிய வாளினுல் கொலை செய்யலாகாது. சிலர் இதே தொழிலாகத் திரிவார்கள். பள்ளிப் பிள்ளைகளில் சிலர் மற்றவர்களைப்பற்றி ஆசிரியரிடமும் தலைமை ஆசிரியரிடமும் கோட் சொல்லித் தங்களுக்கு நன்மதிப்பைச் சம்பாதிக்கத் தேடுவார்கள். கேவலம்! அற்பத்தனம்!

**ஒன்ரு உலகத்து உயர்ந்த புகழ் அல்லால்**
**பொன்ருது நிற்பதுஒன் றில்.**

தனக்கு ஈடில்லாத புகழ் அல்லாமல் உலகில் அழியாமல் நிலைத்து நிற்பது வேறென்றுமில்லை.

சிலர் எப்போதுமே மற்றவர்களைப்பற்றிக் குறை கூறுவார்கள். அவர்கள் எவ்வளவு அரிய பெரிய செயல்களைச் செய்திருந்தாலும், அதிலும் ஒரு குறையைக் கண்டுபிடிக்க முயலுவார்கள். சிலர் ஒருவனுடைய கருத்து இன்னதென்று அவன் உள்ளத்தின் உள்ளே நுழைந்து பார்த்தவர்களைப்போல் அவனது செயலுக்கு தவறுன நோக்கத்தைக் குறிப்பார்கள். ஒரு பையன் நல்ல எண்ணத்தோடு ஆசிரியர் உடையிலிருக்கும் மையை எடுத்துக் காட்டுகிறுன். ஆனல் மற்ருெருவனே அவன் 'காக்காய் பிடிப்பதற்காக' இவ்விதம் செய்கிறுன்

என்று குறை கூறுவான். இத்தகைய வார்த்தைகளால் நாம் பிறருடைய நற்பெயரைக் கெடுக்கக்கூடும்; மற்றவர்கள் அவர்கள்பால் கொண்டுள்ள நல்ல எண்ணங்களை மாற்றக்கூடும். இது தவறு.

இன்னும் சிலர் வேணுமென்றே குற்றமில்லாத ஒருவன் பெயரைக் கெடுக்கும் கருத்தோடு இல்லாதது பொல்லாததையெல்லாம் இட்டுக்கட்டி அலங்கரித்துச் சொல்லுவார்கள். இதனால் குற்றமற்ற பையன் பெரும் தண்டனைகளுக்கும் உள்ளாவான். இது ஈனத்தனம்! மனிதனுக்கு அழகல்ல! இவ்விதம் பிறர் பெயரைக் கெடுத்தவர்கள் ஈடுசெய்து உண்மையை உரைத்து, மறுபடியும் அவன் தன் நல்ல பெயரை அடைவதற்கு வேண்டிய எல்லாவற்றையும் செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்கள். இது எளிதல்ல! ஆனால் செய்வது கடன்.






தேசப்பற்று, நாட்டன்பு, தேச பக்தி, தேசாபிமானம் எல்லாம் ஒன்றுதான். ஆங்கிலத்தில் 'Patriotism' என்பர். எந்த நாட்டவனாயிருப்பினும், அவனவன் தன் நாட்டுமட்டில் அதிகப் பற்றுக் கொண்டிருக்கவேண்டும். நமது சாய்நாடு நம்மைப் பேணி வளர்த்து நமக்கு வேண்டிய தேவைகளைப் பொழிந்து வருகிறது. நமது தாய் நாட்டின் மட்டில் நமக்கு அன்பு, பக்தி இல்லையென்றால், நாம் மிலேச்சரிலும் ஒரு படி தாழ்ந்தவர்களே. உலகிலே எவன் நாட்டுப்பற்றற்று உயிர் வாழ்கின்றானோ அவனது ஆன்மா இறந்து போனதென்றே சொல்ல வேண்டும். அத்தகைய மனிதன் இறந்தால், அவனுக்கு யாதொரு மரியாதையும் கொடாமல் அவன் சடலத்தைப் புதைக்க வேண்டும் என்னும் கருத்துக்கொண்ட ஒரு கவியைப் பாடியிருக்கிறார் ஆங்கிலக்கவி வால்டர் ஸ்காட்.

Breathes there a man with soul so dead
Who never to himself hath said,
'This is my own, native land!'

Whose heart hath ne'er within him burned,
As home his footsteps hath turn'd
From wandering on a foreign strand?

நமது நாட்டை நாம் அதிகப் பற்றுடன் நேசிப்பதால், மற்ற நாட்டு மக்கள் மிலேச்சர்கள், மதிப்புக்கு அருகதை

யற்றவர்களென்று எண்ணுவது நமது குறுகிய மனப்பான்மையைக் காட்டுகிறது. உண்மை நாட்டன்பு வெறும் சொல் மாரிகளிலும் வாய்ப் பேச்சுகளிலுமில்லை. சிலர் உலகிலேயே தங்கள் நாட்டைப் போலில்லை என்று பறை சாற்றிக்கொண்டே இருப்பார்கள். ஒரு சமயம் சில கிராமவாசிகள் 'சென்னை நகரிலிருந்து சிலோன் வரையிலும் எங்கள் கிராமத்தைப்போல உயர்ந்த ஊர் கிடையாது' என்று மெச்சிப் பேசினார்கள். 'என்ன விசேஷம் உங்கள் ஊரில்?' என்று ஒருவர் வினவினார். 'எங்கள் ஊரில் எல்லாருமே வேளாளர்கள்' என்று அவர்கள் பதிலளித்தார்கள். அவர் 'உங்கள் ஊருக்கு எட்டுக் கல்லுக்கு அப்பாலேயுள்ள கிராமத்திலும் எல்லாரும் வேளாளர்கள் தானே. அந்தக் கிராமத்துக்கு நான் போயிருக்கிறேன்' என்றார். அந்தக் கிராமவாசிகள் 'அடே, தெரியாதே எங்களுக்கு!' என்று தங்கள் வியப்பைக் காட்டினார்கள். தங்கள் ஊருக்கு அருகிலுள்ள ஊரைப்பற்றி அறியாதவர்கள் சென்னையிலிருந்து சிலோன் வரையிலும் தங்கள் ஊரைப் போல் கிடையாது என்று சொல்ல முன் வந்து விட்டனர். அதுபோல் தான் சிலர் எப்போதுமே அகில உலகில் நமது நாட்டைப் போல் கிடையாது; நமது இட்லியைப் போல் கிடையாது; நமது சாக்கடைகளைப்போல் கிடையாது என்று வம்பளந்து கொண்டே இருப்பார்கள். இது உண்மையான நாட்டன்பா?

நாம் உண்மைத் தேசப் பற்றுக்கொண்டு, நம் நாடு வளம் பெற உழைக்க வேண்டும்.

வளம் அறிவு வீரம், வளர் இசையும் மாந்தர்
உளமகிழ்வும் ஓங்கிய நாடு

என்று பாடினார் சுத்தானந்த பாரதியார். பயிர் வளம், பொருள் வளம், கலைவளம், தன்னறிவு, கற்றறிவு, ஆன்ம வீரம், ஆற்றல் இவற்றால் வளரும் புகழும், மக்களின் மன மகிழ்வும் ஓங்கியதே நல்ல நாடாகும். நாட்டுக்குத் தொண்டு செய்கிறவன், வீட்டுக்கு நன்மை செய்கிறவனாகிறான். நாடு சோர்ந்தால் வீடும் சோரும்.

நாட்டில் ஆணும் பெண்ணும் முழு வளர்ச்சி பெற வேண்டும். அவர்கள் நாட்டின் நான்கு கைகளாகப் பணி யாற்ற வேண்டும். நம் உழைப்பால் நம் நாட்டிலுள்ள மக்களைக் காணும் பிற நாட்டு மக்கள் நம்மேல் மதிப்பும் மரியாதையும் கொள்ள வேண்டும்; பகைவர் கண்டு அஞ்ச வேண்டும். ' இராமன் ஆண்டாலென்ன, இராவணன் ஆண்டாலென்ன? ' எனக்கு என்றும் கிடைக்கும் பழையது கிடைத்துப் போகும் என்ற அற்பர் மனப்பான்மையோடு இருக்கலாகாது. நாட்டின் மக்கள் நம் நாட்டில் அறிவும், தொழிலும், வளமையும், வாணி பமும், ஆத்ம ஞானமும், தர்ம வீரமும் பொலியச் செய்தல் வேண்டும்.

நாம் உண்மையான நாட்டுப் பற்றுள்ளவர்களாயிருப்பின், நாம் காணும் குறைகளை நீக்க முயற்சி எடுக்கவேண்டும். போலித் தேசப்பக்தர்கள்தான் எப்பொழுதுமே வீண்பெருமை யடித்துக்கொண்டிருப்பார்கள்.

நாம்திருந்தி மேலோங்க நாடும்திருவோங்கும்
தாம்தாம் திருந்தல் தலை. (சுத்தானந்த பாரதியார்)

ஒவ்வொருவரும் தங்களது குறைகளை ஆய்ந்தறிந்து அவைகளைத் திருத்திக் கொண்டால், பூரணம் பெறுவார்கள்; நாடும் தழைக்கும். நாட்டைச் சீர்திருத்து முன், ஒவ்வொரு வரும் தம்மையே திருத்த முன் வர வேண்டும். திருந்தித் திருத்து! தம்மிடம் குறையிருக்கப் பிறரைத திருத்தத் தொடங்கினால், மனைவி மக்கள் பட்டினி கிடக்க, மகேசுர பூஜை செய்ததற்கு ஒப்பாகும். கிலாட்ஸ்டன் என்னும் பிரசித்திபெற்ற ஆங்கில முதலமைச்சர் கூறினார் : " ஒருவன் தன் நாட்டுக்குச் செய்யும் பெரும் கேடு அந் நாட்டை வீணே புகழ்வதே. ஏனெனில் எங்கள் நாட்டைப் போலுண்டா; அது எல்லா விதத்திலும் மேம்பாடுள்ளது; உலகில் எங்கள் நாட்டைப்போல் உத்தம நாடு வேறொன்றுமில்லை என்றெல் லாம் கொக்கரித்துக் கொண்டு மக்கள் ஒன்றும் செய்யாமல் தங்கள் பெருமையிலேயே மந்தமாய் வீற்றிருப்பார்கள். நாடு வளம் பெறாது."

இன்னும், போலித் தேசப் பக்தி தன் நாட்டின் எல்லாப் பழக்க வழக்கங்களையும், கொள்கைகளையும் பாராட்டி, ஆதரித்தே பேசும். உண்மைத் தேசப் பக்தி அவ்வாறல்ல. நல்லவைகளை ஆதரிக்கிறது; அநாகரிகமானவைகளையும் தீய வழக்கங்களையும் ஒழிக்க முயலுகிறது. சமீபத்தில் நம் நாட்டில் நாட்டுப் பெருமையையே பாடிக்கொண்டிருக்கிறோம். ஆனால் நாம் செய்து வரும் சிற்சில அநாகரிகமானவைகளை நாம் கவனித்தோமா? அவைகளை நீக்க வழிவகை தேடினோமா? வெற்றிலையைப் போட்டுக் கொண்டு சிலர் வீதி வீடு எல்லாம் வண்ணம் பூசிக்கொண்டே செல்கிறார்கள். விளக்குத் தூண்கள், சுவர்கள் இவைகளெல்லாம் வெற்றிலை போட்ட பின் சுண்ணும்பை அப்புகிறதற்காகவே நிறுத்தப்பட்டவையெனத் தோற்றமளிக்கும். பஸ்ஸில் செல்லும் போதே மூக்கைச் சிந்துகிறார்கள்; காறித் துப்புவார்கள். வீதிகளில் பெண்கள் சென்றாலும் பரவாயில்லை, சிலர் அது ஆணின் தனி உரிமை, என்றதுபோல் வீதி ஓரத்தில் உட்காருவார்கள். சில வீதிகளிலிருக்கும் மேடை எவ்வளவு அசுத்தமாயிருக்கிறது? இவ்விதம் ஒவ்வொரு துறையிலும் எத்தனையோ குறைபாடுகள்! பஸ் நிலையங்களிலுள்ள கக்கூஸ்களில் கால் வைக்கத் தகுதியா? ரயில் வண்டிகளில் பழங்களைச் சாப்பிட்டு உள்ளே துப்புகிறார்கள். திருந்தித் திருத்த வேண்டும். எனவே திருத்த முன் வர வேண்டிய மாணவர்கள் இவ்வித அநாகரிகச் செயல்களை அகற்ற வேண்டும்.

ஒரு நாட்டின் ஆற்றல் ஒற்றுமையே. ஒற்றுமையே வாழ்விற்கு இன்பமளிக்கும்; ஒற்றுமையின்மை துன்பமளிக்கும். ஒரு நாட்டின் பெருமை அதிலுள்ள மக்களின் ஒற்றுமையில் விளங்கும். நமது நாட்டில் பல சாதிகளிருந்தாலும், மதங்களிருந்தாலும், நாம் சாதிமத வேறுபாடுகளைப் பாராட்டாமல் எல்லாரும் இந்திய மக்கள் என்னும் உணர்வால் ஒன்றுபடவேண்டும். அப்போது தேச வாழ்க்கை இன்புறும்; இத்தகைய ஒற்றுமையால் சண்டை சச்சரவுகள் நீங்கும்; ஆற்றல் வேலையில் ஆர்வம் உண்டாகும்; நாடு வளம்பெறும். இத்தகைய ஒற்றுமையே நமக்கு மெய்யான வலிமை.

உள்ஒன்றினாலே யுலகுஒன்றும் ஆதலினால்
உள்ளத்தில் ஒற்றுமையை ஊன்று.

நாட்டில் ஒற்றுமை வேண்டுமென்றால், அது முதலில் உள்ளத்தில் ஊன்றி நிற்கவேண்டும்.

ஆகையால் நாம் எல்லோரும் மெய்யான நாட்டன்பு கொண்டு, நமது நாடு முன்னேற்றமடைய வேண்டும், மக்கள் அனைவரும் சுபிட்சமாய் வாழவேண்டுமென்று விரும்புவதோடு நிற்காமல், எல்லாம் வல்ல இறைவனைப் பார்த்து இறைஞ்சி மன்றாடவேண்டும்; நாமும் ஒற்றுமையுடனும் ஊக்கத்துடனும் உழைக்கவேண்டும்.

வந்தே மாதரம் என்போம்—எங்கள்
மாநிலத் தாயை வணங்குதும் என்போம்.

1. ஜாதி மதங்களைப் பாரோம்—உயர்
ஜன்மம் இத்தேசத்தில் எய்தின ராயின்
வேதிய ராயினும் ஒன்றே—அன்றி
வேறு குலத்தினர் ஆயினும் ஒன்றே
ஒன்றுபட்டால் உண்டு வாழ்வே—நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்—இந்த
ஞானம் வந்தால்பின் நமக்கெது வேண்டும்?

2. செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே. (பாரதியார்)

**வாயில்லாச் சீவன்:**

வாயிருந்தும் வாய் திறந்து தங்கள் குறைகளைக் கூறக் கூடாத பிராணிகளை வாயில்லாச் சீவன் என நம் நாட்டில் மக்கள் அழைக்க நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். அவைகள் பால் நாம் நடந்துகொள்வது எங்ஙனம்?

விலங்குகளும் பறவைகளும் நமக்கு எத்தனை பயனளிக்கின்றன என்று சொல்லாமலே விளங்கும். விவசாயிகளுக்கு ஒரு சோடி காளைமாடுகள் எத்தனை பெரிய சொத்து! நிலத்தை உழவும், தண்ணீர் பாய்ச்சவும் அவைகளைப் பயன் படுத்துவார்கள். பசுவினால் நமக்கு வரும் பலனை அறியாதார் ஒருவருமிலர். நமக்காக உழைக்கும் இக்கால்நடைக்கு நாம் கூலி கொடுக்கப் போகிறோமா அல்லது 'போனஸ்' கொடுக்கப் போகிறோமா? ஆடு கொழுத்தால் இடையனுக்கு இலாபம் என்பதுபோல, நமது கால் நடைகள் நன்றாயிருந்தால் நமக்குத் தான் பயன். ஆதலால் அவைகளுக்கு வயிறு நிறையத் தீனி போட வேண்டும். சிலர் தீனியும் போடாமல், பசுவினிடத்தில் நிறையப் பாலும் கறக்க முயற்சிக்கிறார்கள். கொடுமை! அவைகளுடைய முதுகைத் தாங்கக் கூடாத சுமையினால் உடைக்கக் கூடாது. அடித்துக் குத்திக் காயப் படுத்தித் துன்புறுத்தலாகாது. நாம் சில வேளைகளில் காணும் காட்சி என்ன? உடைந்த கொம்பும், முறிந்த வாலும், குருதி கொட்டும் உடலுமுள்ள கால் நடைகளைப் பார்க்கிறோம். சில மாடுகள் ஓடும். காரணம் நிற்கச் சக்தியில்லாமையே.

வீட்டில் நாய், பூனை முதலியவைகளை வளர்க்கிறோம். நாய் எத்தனை நன்றியுள்ள விலங்கு! நமது மாநிலத்துப் போலீஸ் இலாக்காவிலுள்ள நாய்களால் எத்தனை கொலைகாரர்களும் கள்ளர்களும் அகப்பட்டிருக்கின்றனர்! நாயை நன்றாக வளர்த்தால் நமது வீட்டையும் தோட்டத்தையும் காக்கிறது. நாய் நமது இணைபிரியாத தோழனுமிருக்கிறது. வில்லியம் கூப்பர் என்னும் ஆங்கிலக் கவி ஒரு சமயம் ஓர் ஓடைபருகில் நின்று தன் ஊன்றுகோலால் ஒரு மலரைப் பிடித்து இழுத்துக் கொண்டிருந்தார். வெகு நேரம் முயன்றார். பயனில்லை. வீடு திரும்பினார். இதைக் கண்டிருந்த அவரது நாய் தண்ணீரில் குதித்து ஒரு கொடியைக் கவ்விவந்து, அவர் முன் வைத்தது. எத்தனை விசுவாசம் பாருங்கள்! அவர் இந்நிகழ்ச்சியையே ஒரு கவியாகப் பாடியிருக்கிறார்.

பொதுவில் நாம் விலங்குகளை கொடுமைப்படுத்தும் கருத்தோடு வதைக்கக்கூடாது. நாம் வாயில்லாச் சீவனைக் கொடுமைப்படுத்தியே பழகிவந்தால், நமது இதயம் கல்லாகிறது. மக்களிடமும் கொடுமை மனப்பான்மையே தலைகாட்டும். அதற்கு மாறாக விலங்குகளை அன்போடு நடத்திவந்தால் மக்களையும் அன்போடு நடத்துவோம். பள்ளிச் சிறுவர்கள் கழுதை வாலில் பட்டாசு கட்டிவிடுவார்கள். நாயோ, பன்றியோ ஒரு இடுக்கில் அகப்பட்டுக்கொண்டால், கதவுகளை அடைத்துக்கொண்டு அவைகளை கல்லாலும் தடிகளாலும் அடிப்பார்கள். குருவிகளைப் பிடித்து இம்சைப்படுத்துவார்கள். இதையெல்லாம் நாம் தடுக்கவேண்டும். மற்றவர்கள் செய்தால், நாம் நல்ல முறையில் அவர்களுக்கு எடுத்துக்காட்டி அவர்களையும் தடுக்கவேண்டும்.

அறிவினான் ஆகுவதுஉண்டோ பிறிதின்நோய்
தன்நோய்போல் போற்றாக் கடை.

வேறோருயிருக்கு வந்த துன்பங்களை தமக்கு வந்த துன்பங்களாக காப்பாற்றாதவிடத்து, அறிவினால் யாதொரு பயனுமில்லை.

மிருகங்களுக்கு அன்பு காட்டவேண்டும் என்று சொல்லும்போது, அவைகளை நமது பயனுக்குக்கூடக் கொல்லக் கூடாது என்று எண்ணுவது தவறு.

படைத்தான் படைப்பெல்லாம் மனுவுக்காக
மனுவைப் படைத்தான் தனைவணங்க.

இறைவன் உலகப்படைப்பு அனைத்தையும் மனிதனிடம் ஒப்புவித்திருக்கிறார். அவைகளைத் தக்க முறையில் பயன்படுத்திக் கடவுளை வணங்கி வாழவேண்டியவன் மனிதன். விலங்கு, பறவை, மச்சம் எந்தப் படைப்பையும் தன் பயனுக்குத் தேவையாயிருந்தால் கொல்லலாம்; ஆராய்ந்து பார்ப்ப

தற்கு அவைகளை வெட்டலாம்; விருப்பமானால் உண்ணலாம். ஒரு விலங்கை வதைப்பது வேறே; நமது பயனுக்கு அதைக் கொல்வது வேறே. மருத்துவத்தில் விஞ்ஞானம் மிக உயர்ந்து பல்லாயிர மக்களின் உயிரைக் காத்துவருகிறதென்றால், மருத்துவ அறிஞர்கள் விலங்குகளை அறுத்துச் செய்த பரிசீலனைகளின் பயனாலேதான் என்பதை நாம் மறந்துபோகக் கூடாது.






மனித சமுதாயங்களுக் கெல்லாம் அடிப்படை குடும்பம். அது ஒரு சிறு சமுதாயம் எனலாம். அரசுக்கு இயல்பான அடிப்படை குடும்பமே. "குடும்பம் அரசியல் சமுதாயத்துக்குப் பிறப்பிடம். நாடுகளின் கதியை நிர்ணயிக்கும் தொடக்க அலுவல் பெரும்பாலும் குடும்பமாகிற வீட்டின் எல்லைக்குள் தொடங்குகிறது" என்று வரைந்துள்ளார் ஓர் மதப் பெரியார்.

திருமணத்தின் வழியாகவே மனிதர் குடும்பத்தின் உறுப்புக்களாகின்றனர். தீர்க்கமான ஒரு நோக்கத்தைக் கொண்டே, ஆணும் பெண்ணும் திருமணத்தில் ஈடுபடுகின்றனர். இவ்விதம் இணைக்கப்பட்டவர்களும் இவர்களுடைய குழந்தைகளும் சேர்ந்துதான் குடும்பமாகிறது. இம்முறையில் ஏற்படும் குடும்பமே மனிதனுக்கு இயல்பான சமுதாய வாழ்க்கைக் கெல்லாம் அடிப்படை.

ஆகையால், திருமணத்தினால் குடும்பம் நிறுவப்படுகிறது. அதன் வழியாய் மனித குலம் வளர்ச்சியடைகிறது. இது ஒரு இயற்கை ஏற்பாடு.

## 1. ஓர் உடன்பாடு

திருமணம் ஓர் உடன்பாடு. இன்று இருந்து நாளை முறியக் கூடியதல்ல. நிலைமையான, தவிர்க்கக் கூடாத ஒரு உடன்பாடு. விலங்குகளுள்ளே காணப்படும் ஆண் பெண் ஐக்கியத்தாலுண்டாகும் ஒரு உடலொற்றுமையல்ல. திருமண

மானது உள்ளமும் உடலும் ஒன்றுபட்ட இருவாது ஒற்றுமை. அரிஸ்டாட்டல் என்னும் உலகம் போற்றும் கிரேக்க அறிஞர் கூறுகிறதாவது : "மனிதர் நடுவில் ஆணும் பெண்ணும் கூடி வாழ்வது மக்கட் பேற்றின் பொருட்டுமட்டுமல்ல; ஒருவர் வாழ்க்கையில் இன்னொருவர் பங்குபெற்று ஒரு கூட்டு வாழ்க்கை நடத்தும் பொருட்டும் ஆகும். ஏனெனில் ஆண் பெண் இருவருக்குமுரிய கடமைகள் வெவ்வேறுபட்டவை. அவர்கள் தமக்குரிய இயற்கை நலன்களை யெல்லாம் ஒன்று படுத்தி, ஏகோபித்து வாழ்க்கை நடத்துவதால், ஒருவர் ஒருவரை நிறைவுபடுத்துகிறார்கள்." இத்தகைய நலன்களை அடைய வேண்டுமானால், விவாகரத்து என்பதற்குப் பொரு ளில்லை. ரத்துச் செய்ய முடியாத, நிலையான ஒரு உடன் பாடாய் இருக்க வேண்டும் திருமணம். அதனால்தான் 'விவா கம் மக்களைப் பெற்றுவளர்ப்பதை நோக்கமாகக் கொண்டு, ஒரு பொது வாழ்கையில் ஈடுபட்டிருக்கும் ஆண்பெண் இருவரின் நிலைமையான ஒன்றிப்பு' என்று வரையறுத்துக் கூறப்படுகிறது. எனவே, திருமணத்தின் முதல் நோக்கம் மக்கட்பேறும், பிள்ளை வளர்ப்பும்; இரண்டாவது நோக்கம் கணவன் மனைவிகளின் பரஸ்பர உதவியும், விவாக அன்பின் வளர்ச்சியும்.

திருமணத்துக்கு மணமக்கள் இருவருடைய சுயேச்சை யான சம்மதம் தேவை. இருவர் மனமொன்றிச் செய்து கொள்ளும் திருமணமே கருத்திற்கினிய கலியாணம். பிறர் கட்டாயத்தால் செய்யப்படும் பலவந்தக் கலியாணம் மணப் பொருத்தம் இல்லாமல், வாதுவழக்குகளில் முடியும் என்று பாடுகிறார் சுத்தானந்த பாரதியார்.

காதல் மணமே கருத்திற்கினிய மணம்;
வாதம் வலுமணமெல் லாம்.

கலியாணம் தாலியை இறுகக் கட்டுவதிலோ அல்லது மாலை மாற்றிவிடுவதிலோ இல்லை, மணமகன் மணமகள் இரு பாலருடைய சம்மதத்திலிருக்கிறது.

## 2. விவாகரத்து :

விவாகரத்து அல்லது மணவிலக்கு என்பது ஆகாத பெண்ணை நீக்கிவிட்டு வேறொரு மணம்புரிதல். அதுபோல பெண்ணும் விரும்பாத கணவனை விலக்கிவிட்டுத் தனக்கு விருப்பமான வேறொருவனை மணந்துகொள்ளுதல்.

"சட்டத்துக்குட்பட்டதும், இறைவனால் மிகவும் வெறுக்கப்படுவதும் விவாகரத்தாகும்" (நபியின் அறிவுரை)

குழந்தைகள் நிரந்தரமாய் வளரவும், கல்வி கற்கவும் குடும்பம் நிலையுள்ளதாய் இருத்தல் அவசியம். விவாகரத்தை நாம் ஏற்றுக்கொண்டால் குடும்பம் சீர்குலையும் ; சமூகம் சீரழியும் என்பதில் ஐயமில்லை. அப்படி இருந்தும் சம உரிமை, பெண்களின் முன்னேற்றம் என்று சட்ட முறையில் நமது அரசு மணவிலக்கை ஏற்றுக்கொள்ளுகிறது.

> பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
> திண்மைஉண் டாகப் பெறின்.

கற்புடையவளாயிருப்பின் மனைவியினும் உயர்வான பொருள் வேறு உளதா ?

> தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
> பெய்எனப் பெய்யும் மழை.

தெய்வத்தை வணங்கி, தன் கணவனாகிய தெய்வத்தையும் வணங்கிவருகிறவள் பெய் என்று சொன்னால் மழையும் பெய்யும்.

> தன்காத்துத் தன்கொண்டான் பேணித் தகைசான்ற
> சொற்காத்துச் சோர்வுஇலாள் பெண்.

கற்பினின்றும் வழுவாமல் தன்னைக் காப்பாற்றிக் கொண்டு, தன் கணவனை உபசரித்து தம்மிருவரிடமும் புகழ் நீங்காமல் காப்பாற்றி, மேற்கூறிய நற்குண நற்செய்கைகளைக் கடைப்பிடித்து வருபவளே பெண்ணாவாள்.

சிறைகாக்கும் காப்புஎவன் செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை.

பெண்களைக் காவலினாலே தலைவர் காக்கும் காவலானது பயனற்றது. கற்பென்னும் குணத்தினால் அப்பெண்கள் காக்கும் காவலே முதன்மையான காவல்.

இக்காலத்தில் எத்தனையோ மனைவிமார் எடுத்ததற்கெல்லாம் சிணுங்கிக்கொண்டு தாய் வீட்டுக்குப் போகிறேன் என்று மிரட்டுகிறார்கள். கணவனையும் தவிக்கவிட்டுத் தாய்வீடும் செல்கின்றனர். கணவன்மாரில் அநேகர் மனைவியை தனது இச்சைக்குரிய விளையாட்டுப் பொம்மையாகக் கருதி அவர்களை நடத்துகிறார்கள். சிலர் அவர்களை மிருகத்தனமாய் அடித்தும் கொடூரப்படுத்தியும் வருகிறார்கள். விவாகரத்து, சட்டமூலமாய் இப்போது இருப்பதால், எக்காரணத்தையும் மிகைப்படுத்தி நீதிமன்றத்தில் மணவிலக்கைப் பெற்றுவிடுவார்கள். குடும்பம் எங்கே! பிறந்த பிள்ளைகள் யாருக்குச் சொந்தம் ? யார் பாதுகாப்பிலிருந்து வளரவேண்டியவர்கள் ?

ஒரு சமயம் அமெரிக்கத் தம்பதிகள் விவாகரத்துக்கு விண்ணப்பித்திருந்தார்களாம். விசாரணையில் மனைவியின் வாக்கு மூலம் : 'என் கணவன் கதவு சன்னல்களையெல்லாம் டபார் டபார் என்று அடித்துக் கொண்டு, நீ என் மனைவியாயிருந்தால்!... என்கிறார். என்னை அடித்தது போல் தானே கருத்து? இவரோடு நான் இனிமேல் வாழ முடியாது ' என்றாளாம்!

மணவிலக்கை நாம் ஆதரிக்கக் கூடாது. அதன் விளைவு சமூகத்துக்கும் குடும்பத்துக்கும் மிகவும் சீர் கேடானது. அப்படியானால் குடியரசு நாட்டிலே மக்களுக்குச் சமத்துவம் இல்லையா ? பெண் பாலரை இன்னும் அடக்கி ஒடுக்கி வைக்க வேண்டுமா என்று கேட்பர் சிலர். திருமண உடன்பாட்டினால் உண்டாகும் கடமை உரிமைகளில் சமத்துவம் உண்டு என்பதை ஒருவரும் மறுக்கிறதில்லை. ஆனால் மற்றக் காரியங்களில் உயர்வு தாழ்வு இருந்தால்தான் ஆட்சி புரிய முடியும். கீழ்ப்படிதல், பணிவு இவை இல்லாமல் எந்தச் சமுதாயத்

தையும் நடத்த முடியாது. அமைச்சர்களும் நம்மை யொத்த மக்கள் தான். ஆனால் அதிகாரத்துறையிலே அவர்கள் நமக்கு மேற்பட்டவர்கள். சமம் என்று சொல்லி, மாணவன் கற்பிக்கும் ஆசிரியருக்குப் பணிய மறுத்தால் எத்தனை அபத்தம்! சமத்துவம் என்று சாதித்துப் பிள்ளைகள் பெற்றோரை மேய்க்கப் புறப்பட்டால் அது முறையா? அஃதேபோல் குடும்பத்தின் பொது நலம், ஒழுக்கம், இவைகட்கு இன்றியமையாத ஒன்றிப்பும் உறுதியும் நிலவ வேண்டுமாயின் கணவன் மனைவிகளிடையே ஒருவித உயர்வு தாழ்வு இருப்பது தேவை. பெண்கள் எவ்வளவு உயர்ந்த பட்டங்களைப் பெற்றிருந்தாலும், அவர்கள் அமைச்சர் பதவியில் வீற்றிருந்தாலும், மனைவி என்ற முறையிலே கணவனுக்குக் கீழ்ப்படிய வேண்டியவள்! அவனுடைய தலைவியல்ல; துணைவி. என்றும் உவந்த மனதோடு சுயேச்சையாகக் கணவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டியவள். அவளது கீழ்ப்படிதல் ஓர் பணிப் பெண்ணின் கீழ்ப்படிதலல்ல. மனைவியாய் அதாவது வீட்டின் அரசியாய்த் துலங்கி, சுயாதீனம், நேர்மை, அன்பு, மகத்துவம் இவைகளாலான கீழ்ப்படிதலால் தன் கணவனைக் கனப்படுத்த வேண்டியவள்.

காதன் மனையாளும் காதலனும்
தீது இல் ஒரு கருமம் செய்பவே — ஓது கலை
எண்ணிரண்டும் ஒன்றும் மதி என் முகத்தாய் நோக்கல் தான்
கண் இரண்டும் ஒன்றினையே காண்

இரண்டுகண்களும் ஒரு பொருளையே பார்க்கின்றன. அதுபோல அன்புடைய மனைவியும் கணவனும் தம்முள்ளே மாறுபாடில்லாமல் ஒத்து, குற்றமில்லாத செயலையே செய்வர்.

கற்பு உயிர்; நாண் அழகு; காரிகைக்கு நற் கணவன்
சொற்படிதல் ஆகுஞ் சுகம் (சுத்தானந்தபாரதியார்)

## 3. குடும்பத்திட்டம்:

வரவுசெலவு, தரம் இவைகளைக் கவனித்து இத்தனை குழந்தைகளைத்தான் தங்களால் வளர்க்கமுடியும் என்று தம்பதி

கள் இல்லறம் நடத்துவதுதான் குடும்பத்திட்டம். இதை எவரும் எதிர்ப்பதில்லை. இது தவறுமல்ல. இயற்கையின் இறைவன் சதிபதிகள் தாங்கள் எத்தனை குழந்தைகளைப் பெறக் கூடுமோ அத்தனைக் குழந்தைகளையும் பெறவேண்டுமென்று யாதொரு கட்டளையையுங் கொடுக்கவில்லை. ஆனால் குடும்பத் திட்டம், குடும்பக் கட்டுப்பாடு என்னும் அழகு மொழிகளைப் பயன்படுத்தி இயற்கைக்கு எதிரான மறச் செயல்களைச் செய்ய விளம்பரம் செய்துவருகின்றனர். இது தவறு.

திருமணத்தின் முதல் நோக்கம் மக்கட்பேறு. அது தலை சிறந்த பேறு.

> **பெறுமவற்றுள் யாம்அறிவதுஇல்லை அறிவுஅறிந்த**
> **மக்கட்பேறு அல்ல பிற.**

ஒருவன் பெறும் பேறுகளுள் அறியவேண்டுபவைகளை அறிதற்குரிய மக்களைப் பெறுதலைவிட வேறு பேறு மதிப்புக் குரியதல்ல.

இத்தகைய மக்கட் செல்வத்தைப் பெற்றெடுத்து வளர்த்து, கல்வியூட்டி, ஆளாக்கி, ஒரு நிலையில் அவர்களை வைப்பது மிகவும் பொறுப்புள்ள அலுவல்; அதிகத் தியாகம் நிறைந்த அலுவல்; வெகுக் கடினமான அலுவல். எனவே இல்லறத்தைத் தெரிந்துகொள்கிறவர்கள், இத்தனை பொறுப் பையும், சலிப்பையும், தியாகத்தையும், கடினத்தையும் இனிதே ஏற்றுக்கொள்ளும் வண்ணம், இயற்கையின் இறைவன் அக் கடமையுடன் இன்பத்தைச் சேர்த்து வைத்திருக்கிறார். குடும்பத்திட்டத்தை விளம்பரஞ் செய்கிறவர்கள் இன்பத்தை நுகரவும் கடமையை உதறித்தள்ளவும் வழிகளைக் கற்பிக்கின் றனர். மக்கள் வேண்டாம்; இன்பம் வேண்டும். சோற்றைச் சாப்பிடுவதற்கு உதவியாகக் கொடுக்கப்படும் கூட்டு வேண்டு மென்று அதை உண்டு, சாதத்தைத் தொடாத சிறு பிள்ளை களைப்போல், இன்பம் வேண்டும், பொறுப்பு வேண்டாம் என்று மக்களுக்கு அரசும் கற்றுக்கொடுக்கிறது; பயிற்சி அளிக்கிறது. உரோமையர் அக்காலத்தில் பந்தியில் அமர்ந்து

உணவை உருசித்துக்கொண்டு உடனே பக்கத்தில் வாந்தி எடுத்து விட்டு, மறுபடியும் உணவு உண்பார்களாம்! சுவைக்காக! அது போல்தான் இருக்கிறது இவர்களுடைய கூற்றும்! இது தவறு.

மேலும், நமக்குள்ள தத்துவங்கள் புலன்களெல்லாம் இறைவன் அருளின நன்கொடைகள். அவைகளை நாம் தக்க விதம், முறையோடு இயற்கையின் நிபந்தனையின்படி பயன்படுத்துவது அவசியம். கத்தியைத் தக்க முறையில் பயன் படுத்தாவிடில், அதனுல் நமக்கு விபத்து நேரிடும். பேச்சு வன்மையை எடுத்துக்கொள்வோம். அது ஒரு அருமையான தத்துவம். உண்மையை உரைக்க நாம் அதைப் பயன் படுத்த வேண்டும். பொய்பேச நாம் அதைப் பயன் படுத்துவது முறை தவறி நடப்பதாகும். அதுபோல மக்களை உலகிற்கு உதிக்கச் செய்ய நமக்குக் கடவுள் அருளியிருக்கும் அற்புத சக்தியைத் துஷ்ப்பிரயோகம் செய்வதும், பற்பல முறைகளில் வேணுமென்று நாசம் செய்வதும் பாவச் செயல்களாகும்.

சென்ற இரண்டாம் உலகப் போரில் பிரான்ஸ் நாடு தோல்வியுற்றதற்குக் காரணமாக மார்ஷல் பெத்தன் என்ன கூறினுர்? "பிரான்ஸ் இன்று புறங்காட்டியதற்குக் காரணம் போதிய படைப் பலமில்லாமை. பல ஆண்டுகளாக இந் நாட்டின் மக்கள் தொகை குறைந்து கொண்டே வந்தது. இதற்குக் காரணம் பிரஞ்சு மக்கள் மிக அதிக அளவில் கர்ப்பத்தடையைப் பயன்படுத்துவதுதான்" என்ருர்.

காந்தியடிகள் கர்ப்பத்தடையை (குடும்பத் திட்டமும் அதுவே) வன்மையாய்க் கண்டித்தார்; சுய அடக்கம் ஒன்றே சிறு குடும்பங்களை நாடுகிறவர்கள் கையாள வேண்டிய முறை என்று போதித்தார். அப்படியிருக்க, காந்தியடிகளின் சுவட்டைப் பின் பற்றும் அரசு ஏன் இந்த அயல் நாட்டுக் குப்பையை இத்தனை ஆர்வத்தோடு ஆதரிக்கிறது என்பது வியப்பாய் இருக்கிறது. கர்ப்பத்தடையால் நாட்டில் ஒழுக்கம் சிதையும்; பொறுப்புணர்ச்சி போய் விடும்; சுயநலப்பேய் தாண்டவமாடும்; தம்பதிகள் நடுவில் ஐயமும் சண்டையுமே நிலவும். கற்புள்ள மனையாள் துணைவிப் பதவியை இழந்து இன்பமளிக்கும் பொம்மையாக மாறுவாள்.




மனிதன் இயல்பாகவே ஒரு சமூகப் பிராணி. மற்றவர்களோடு கூடி வாழ்ந்து அரசியல் குழுவை நிர்ணயிக்கிறான். இவ்விதம் ஒரு பெரிய அரசைக்கொண்ட சமூகத்தை நாடு, தேசம் என்கிறோம்.

அரசின் முக்கிய நோக்கம் மக்களுடைய உரிமைகளைக் காப்பாற்றுவதும், அவர்களுடைய பொது நலனுக்காக உழைப்பதுமே. ஆகவே, ஒரு நல்ல தந்தை தன் மக்களுக்குச் செய்வதையெல்லாம் அரசு தனது குடிமக்களுக்குச் செய்யக் கடமைப்பட்டிருக்கிறது. அது, தனி மனிதனின் உயிரையும் உடைமையையும், சுதந்திர உரிமையையும் **சுயாதீனத்தையும்** காப்பாற்றவேண்டும்; நாட்டிலுள்ள இயற்கைப் பொருள்களையெல்லாம் திரட்டி, தொழிலையும் உற்பத்தி நிலையங்களையும் ஆதரித்து மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவேண்டும்; மக்களுக்குக் கல்வித்துறையிலும் கலைகளிலும் உரிமைகளைக் கொடுக்கவேண்டும். பள்ளிகளை நிறுவி, கல்லூரிகளைப்பெருக்கி, தனிப்பட்டோர் கூட்டுறவால் நடத்தும் பள்ளிகளையும் கல்லூரிகளையும் ஆதரித்து ஊக்குவிக்கவேண்டும். தொடக்கக் கல்வியைக் கட்டாயக் கல்வியாக்கி, மக்களின் அறியாமையைப் போக்க முயலவேண்டும். நாடு நகரங்களிலெல்லாம் புத்தக நிலையங்களை நிறுவவேண்டும்.

இத்தனையும் அரசு கவனித்துத் தன் திட்டத்தில் அது வெற்றிகாண வேண்டுமென்றால் நிதி இன்றியமையாதது; சட்டதிட்டங்களும் தேவை. அரசுக்கு நிதியை வரி மூலம் திரட்டவும், அதிகாரிகளை நியமிக்கவும் உரிமையுண்டு.

அரசுக்குச் சட்டங்களைத் தீட்டவும், வரி வசூலிக்கவும், சட்டத்தை மீறுகிறவர்களைத் தண்டிக்கவும் உரிமையுண்டானால், சட்டங்களின்படி நடக்கவும், வரி செலுத்தவும் நமக்குக் கடமையுண்டு. அரசியல் சட்டங்கள் நீதியுள்ளனவாயிருத்தல் அவசியம். அவை நாட்டின் பொது நலனைக் குறிக்கோளாய்க் கொண்டிருக்கவேண்டும்.

எல்லா நியாயமான அதிகாரங்களும் கடவுளிடத்திலிருந்தே வருகின்றன. ஆகையால் நியாயமான முறையில் நியாயமான அரசோடு நாம் ஒத்துழைக்கவேண்டும். அரசும் கட்சிக் கொள்கைக்காகப் பொது நலனை அசட்டை செய்யக்கூடாது. பொதுப் பணத்தைப் பொறுப்பற்றவிதமாய் வீணாக்கலாகாது.

**மத உரிமை :**

மனிதனின் உரிமைகளில் மிக முக்கியமானது அவன் தான் விரும்பிய மதத்தில் சேர்ந்து கடவுளைத் தொழுவதற்கு உரிமையளிப்பதே. நமது நாட்டில் பல்வேறு மதங்கள் பல அனுஷ்டானங்களுடன் பல நூற்றாண்டுகளாய் இருந்து வந்திருக்கின்றன. அரசு மக்கள் தெரிந்து கொள்ள வேண்டிய மதத்தை நிர்ணயித்துச் சட்டம் ஏற்படுத்துவதோ அல்லது மதத்தைத் தெரிந்து கொள்ளும் விஷயத்தில் கட்டாயப் படுத்துவதோ தனி மனிதனின் உரிமையைப் பறிப்பதாகும். ஒவ்வொரு மனிதனும் தன் மனச்சான்றுக்கு எத்தகைய கடவுள் வழிபாடு பொருத்தமானது, தூய வாழ்க்கை நடத்த உதவியானது என்று உணர்கிறானோ, அதை வழிபட அவனுக்குப் பூரண சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும். இதுதான் சரி. ஆகையால் தான் மதப்பற்றற்ற அரசாகிய நமது மத்திய அரசு இந்திய சட்டப் புத்தகத்திலே இவ்வுரிமையை எல்லா மக்களுக்கும் அளித்திருக்கிறது.






**பிளவு :**

மனிதன் தன் சொந்த முயற்சியால் கைத்தொழில் செய்து பொருள்களை உற்பத்தி செய்தான். பிறகு கருவிகளைக் கண்டு பிடித்தான். ஒரு யந்திரம் அநேகருடைய வேலையைச் செய்தது ; ஒன்றுக்கு நூறாகப் பலன் அளித்தது. ஆனதால் முதலாளிகள் யந்திரங்களைக் கவனித்தார்கள்; தொழிலாளரை அசட்டை செய்தார்கள். வரும் இலாபத்தில் முதலாளிகள் வெகு சொற்பக் கூலி மட்டும் கொடுத்தார்கள். ஆகலால் பாடுபட்டு உழைத்த பாட்டாளி என்றும் பட்டினியால் வாடினான். முதலாளி பணத்தைக் குவித்தான். இதனால் மக்கள் நடுவில் பெரும் பிளவு உண்டானது. முதலாளிகள் ஒரு பக்கம் ; தொழிலாளிகள் ஒரு பக்கம். இருதரத்தாரும் தாங்கள் கேட்பதும், செய்வதும் நியாயமென்றார்கள்.

**சிக்கலைத் தீர்க்க வழி :**

கார்ல் மார்க்சும், லெனினும் கிளர்ச்சிகளினாலும், வர்க்கப் போரினாலும், தனிச் சொத்துரிமையை அழிப்பதாலும், முதலாளித்துவத்தை ஒழிப்பதாலும், மதப்பற்றை அகற்றுவதாலும், எல்லா உற்பத்தி நிலையங்களையும் அரசு எடுத்துக் கொண்டு சமூகத்தைப் பொது உடைமைச் சமூகமாக்குவதாலும் மட்டுமே தொழிலாளரின் குறை நீங்கும்; சமத்துவம் நிலைநிற்கும்; சமூகம் சீர் ஓங்கும் என்று போதித்தார்கள்.

இச் சிக்கலைப் போக்கக் கத்தோலிக்க மதப் பெரியார்கள் ஆகிய போப்பாண்டவர்கள் முன் வந்தார்கள். தனி உரிமை

இயற்கை உரிமை. இயற்கைச் சட்டத்தை மீறி, மக்கள் நடுவில் பகையை உண்டாக்கி, முதலாளிகளின் சொத்தைப் பறிமுதல் செய்து, தொழிலாளரை முன்னேற்றுவது கூடாத காரியம். ஒன்றே தெய்வம், ஒன்றே மானிடகுலம்; எல்லோரும் உடன் பிறந்தார் என்னும் மனப்பான்மையோடு தொழிலாளிகள் மட்டில் முதலாளிகள் நீதியுடன் நடந்தால் மட்டும் சமூகம் குணமாகும்; சமாதானம் எங்கும் நிலவும் என்று அகில உலகிற்கும் அறிக்கையிட்டார்கள்.

**தனிச் சொத்துரிமை :**

தனிச் சொத்துரிமை மனிதனின் இயற்கை உரிமை. மனிதன் உயிர் வாழ வேண்டும். மணந்து இல்லற வாழ்க்கை நடாத்தலாம். மக்களைப் பெறலாம். மனைவி மக்களுக்கும் தனக்கும் தேவையானவைகளைச் சேகரிப்பதும், அவைகளைச் சேமித்து வைப்பதும் குடும்பத் தலைவனின் கடமை. ஒரு குடும்பத்துக்குத் தேவையான உணவு, உடை முதலியன அந்தந்தக் குடும்பத்தில் தனி உடைமையாயிருப்பது முக்கியம். இவ்வுரிமையை எந்த அரசும் வழங்கவில்லை. இது இயற்கை உரிமை. ஏனெனில் முதல் முதல் உலகிலிருந்தது குடும்பமே தவிர, அரசு அல்ல. அரசு தொடங்கு முன்னரே ஆணும் பெண்ணும் திருமணப் பந்தனத்தில் இணைக்கப்பட்டு கணவனும் மனைவியுமாகிக் குடும்பமாக வாழ்ந்தார்கள். குடும்பத்துக்குரியவைகளைச் சம்பாதிப்பது குடும்பத்தின் உரிமையா அல்லது அரசு அளித்த உரிமையா ?

ஒருவன் மற்றவனைச் சுரண்டித் தன் சொத்தைப் பெருக்குவது தவறு. அதாவது தனிச் சொத்தைத் துஷ்ப்பிரயோகஞ் செய்வது தவறு; ஆனதால் தனிச் சொத்துரிமையே தவறு என்று கூறுவது சரியா ?

தனிச் சொத்து உடைமைக்கு இரட்டிப்பான கடமையுண்டு—தனி மனிதனின் பயன்; சமூகத்தின் பயன். உடைமை தனி நலத்துக்கு மட்டுமே என்று எண்ணுகின்றனர் பலர்; பொது நலத்துக்கு மட்டும் என்கின்றனர் சிலர். ஆனால்

உண்மை என்ன? தனிச்சொத்து தனி நலனுக்கும், பொது நலனுக்கும் பயன்பட வேண்டும். கடவுள் தனக்குக் கொடுத்திருக்கும் சொத்தைச் சுயநலவாதியாய் வீணில் விரையம் செய்யலாகாது; இரும்புப் பெட்டியில் பூட்டி வைத்துப் பூவும் தீபமும் போடக்கூடாது. தனி நலத்துக்கு வேண்டியதுபோக எஞ்சியதை பொதுநலத்தில் பயன்படுத்தவேண்டும். இக் கடமை கடவுளிடமிருந்தே வருகிறது. பிறர்சிநேக மனப் பான்மை ஆழமாய்ப் பதியவேண்டும்.

தனி உரிமை இயற்கை உரிமையானதால், அதை அழிக்க உலகில் யாருக்கும் அதிகாரமில்லை, அரசும் இவ்வுரிமையை அழிக்கக்கூடாது. அரசு ஏற்பட்டதே தனிவுரிமைகளையும் குடும்பவுரிமைகளையும் காப்பாற்றுவதற்காக அன்றி, இயற்கை உரிமைகளை அழித்துப்போடவன்று. தனிச் சொத்து பொது நலனுக்குப் பயன்படுகிறதாவென அரசு கவனிக்கலாம்; அதைச் சட்டதிட்டங்களால் கட்டுப்படுத்தலாம்; கட்டுப் படுத்துதலும் தனிவுரிமை அழியுமளவுக்கு இருக்கலாகாது.

நமது நாட்டில் சொத்தெல்லாம் ஒரு சிலரிடம் குவிந்து போயிருக்கிறது. அவர்கள்மட்டும் தங்கள் தனிவுடைமையின் கடமையைக் கண்டுணர்ந்து, மிகுதியான சொத்தையோ நிலத்தையோ எளிய மக்களுக்கு வினியோகம் செய்தால், தொழிற் சாலைகளும், அனாதை விடுதிகளும் பல இடங்களில் தோன்றும். நாடும் வளம்பெறும்.

ஆச்சாரியா வினோபா பாவேயின் நிலக்கொடை இயக்கம் இதனால்தான் பயனளிக்கிறது.

### முதலும் தொழிலும்:

ஒருவன் தனிச் சொத்தை இரண்டு விதத்தில் சம்பாதிக்கலாம். எவருக்கும் சொந்தமில்லாத ஒரு பொருளைத் தன் வசப்படுத்திக்கொள்வது ஒன்று; பொருள்களை உற்பத்தி

யாக்கித் தன்னுடையதாக்குவது இரண்டாவது. ஒருவன் தன் சொந்த முதல் போட்டு, தானே பாடுபட்டால் உற்பத்தியான பொருள்களின் பலன் முழுவதும் அவனுடையதாகிறது. காரணம், முதலும் அவனுடையது; உழைப்பும் அவனுடையது. அதற்கு மாருக ஒருவனிடம் முதல் இல்லை; உழைப்பு இருக்கிறது. அவனைத் தொழிலாளி என்கிறோம். ஒருவனிடம் முதல் இருக்கிறது; உழைப்பு இல்லை. அவன்தான் முதலாளி. உழைப்பைக் கொண்டுள்ள பாட்டாளியும் பொருள்களை உற்பத்தி செய்ய முடியாது. முதலைக் கொண்டுள்ள முதலாளியும் பொருள்களை உற்பத்திசெய்ய முடியாது. இருவரும் சேர்ந்து நடத்தினாலன்றி, உற்பத்திச்சாலைகளுமில்லை. இருவரும் சேர்ந்து பொருள்களை உற்பத்தியாக்குகிறார்கள். இலாபம் யாருக்குச் சொந்தம்? முதலாளிக்கா? தொழிலாளிக்கா? தங்கள் முதலால்மட்டும் இலாபம் வந்தது போல், முழுப்பயனையும் முதலாளிகள் எடுத்துக்கொள்ள முயற்சிக்கின்றனர். தங்கள் உழைப்பால்மட்டும் இலாபம் வந்ததுபோல், முழுப்பயனையும் பாட்டாளிகள் கேட்கின்றார்கள். இருபாலருடைய கோரிக்கையும் நியாயமானதல்ல. முதலாளியும் பாட்டாளியும் ஒருவித ஒழுங்கு முறையுடன் இலாபத்தைப் பகிர்ந்துகொள்வதுதான் நியாயம். தனிமனிதனும் பலனடைவான்; சமூகமும் பலனடையும்.

**பிழைப்புக் கூலி:**

நடந்தது என்ன? இலாபத்தின் ஒரு சிறிய பாகம் தொழிலாளிக்கு வழங்கப்பட்டது. அவனுக்குக் கிடைத்த கூலி உயிர் பிழைக்கக்கூட போதவில்லை. அவன் உயிர் பிழைப்பதற்குத் தேவையான கூலியாகிலும் அவனுக்குக் கொடுக்கப்படவேண்டும். இதுதானே நியாயம்?

கூலி விஷயத்தில் தொழிலாளியின் உழைப்பை வெறும் பண்டமாகக் கருதக்கூடாது. பண்டங்களின் மதிப்பைப் பொருளாதார விதிகளைக்கொண்டு தீர்மானித்துவிடலாம். எப்பண்டமும் வயிறு வளர்ப்பதற்கு இன்றியமையாததல்ல.

அரிசியில்லையானால் கோதுமை வாங்குகிறோம், பழையது இல்லையானால் இரண்டு வாழைப்பழம் வாங்கிக்கொள்ளலாம். நாளைக் கடத்தலாம். ஆனால் தொழிலாளியின் பிழைப்புக்கு இன்றியமையாதது அவனிடமிருக்கும் உழைப்பு ஒன்றே. அவன் வாழ்வது அந்த உழைப்பைக்கொண்டுதான்; அவன் தன் தொழிலை விட்டால், வாளா நிற்கவேண்டியவன்.

பண்டத்துக்கும் தொழிலுக்கும் இன்னொரு வேற்றுமையுமுண்டு. சாதாரண பண்டம் வேறே; அதைப் பயன்படுத்தும் மனிதன் வேறே. பண்டத்தை மனிதனினின்று வேறுபடுத்தலாம். தொழிலோ தொழிலாளியிடமிருந்து பிரிக்கக்கூடியதல்ல. மன மொழி மெய்யுடன் தொழிலாளி உழைக்கிறான். அவன் ஓர் உயிரற்ற சடப்பொருளல்ல. அவனை ஓர் உயிரற்ற யந்திரமாகக் கருதுவது புத்தியில்லாமை. அவனை யந்திரத்துக்கும் தாழ்ந்தவனாகக் கருதுவது பாதகம். தொழிலாளி தன் பிழைப்பைக்கொண்டுமட்டுமே உயிர் வாழவேண்டியிருப்பதால், அவனுக்கு முதலாளி கொடுக்கும் கூலி அவன் உயிர் பிழைக்கப் போதியதாயிருத்தல் அவசியம். நாளும் உழைத்தும் உயிர் வாழக்கூடச் சம்பளம் கிடைக்கவில்லையென்றால், இது அநியாயம். ஆதலால் முதலாளி தன்னிடம் வேலை செய்யும் பாட்டாளிகளுக்கு **பிழைப்புக்குப் போதிய கூலி** கொடுப்பது நீதி; கடமை.

### குடும்பக் கூலி:

தொழிலாளி ஒரு யந்திரமல்ல, பகுத்தறிவுள்ள மனிதன். அவன் மணந்து கொள்ளலாம்; மக்களைப் பெறலாம். இது இயற்கை. தன் குடும்பத்தைக் காப்பாற்றுவது அவன் மேல் சுமந்த கடமை. தன் குடும்பத்தைப் போஷிப்பதற்குத் தன்னிடம் அவன் கொண்டிருப்பதெல்லாம் என்ன? உழைப்பு. தனது உழைப்பின் கூலியால் அவன் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டியிருப்பதால், உழைப்புக் கூலி அவன் பிழைப்பதற்குப் போதிய கூலியாய் மட்டுமன்று; அவன் குடும்பமும் உயிர் வாழ வேண்டிய **குடும்பக் கூலியாய்** இருப்பது

அவசியம். தொழிலாளியின் மனைவியும் வேலைக்குச் செல்ல வேண்டியதானால், தொழிற்சாலையில் முதலாளி கொடுக்கும் சம்பளம் குடும்பக்கூலியல்ல. முதலாளிகள் குடும்பக் கூலியை மறுப்பதால், தொழிலாளிக்கும் கேடு வருவிக்கின்றார்கள்; சமூகத்திற்கும் தீமை விளைவிக்கிறார்கள்.

விளையும் தீமையென்ன? குடும்பக் கவலையால் தொழிலாளி ஏங்குகிறான். உடலைக் கவனிக்கவே அவனுக்கு நேரமில்லை. ஆத்மீக வாழ்வுக்கு நேரம் ஏது? மனைவியும் வேலைக்குச் செல்கிறாள். பிள்ளைகளைக் கவனிக்க ஆளில்லை. சிறுவர் சிறுமிகள் வாலிபப் பெண்கள் சீர்கெட்டுப் போகிறார்கள். பிள்ளைகள் சத்துள்ள உணவில்லாமல் நோய்க்குள்ளாகிறார்கள். சமூகமே கேட்டுக்குள்ளாகிறது.

தொழிற்சாலைகளில் வரும் லாபத்தில் முதலாளி யந்திரத்தைப் புதுப்பிக்க ஒரு தொகையை ஒதுக்கி வைக்கிறான். அதுபோல் உயிருள்ள யந்திரமாகிய பாட்டாளியைப் பாராமரிக்க அதாவது நோய்வாய்ப்பட்டால் மருத்துவ உதவி செய்யவும் மக்களுக்குக் கல்வியூட்டவும் ஒரு தொகையை ஒதுக்கி வைத்து மருத்துவ விடுதி, பள்ளிக்கூடம் முதலியவைகளை நிறுவ வேண்டும்.

**சங்கங்கள் :**

அக்காலத்தில் இங்கிலாந்தில் ஒரே விதத் தொழில் புரியும் தொழிலாளர்களும் முதலாளிகளும் சேர்ந்து சங்கங்கள் கூடினார்கள். வேலையையும் கூலியையும் திட்டஞ் செய்தார்கள். நமது நாட்டிலும் இத்தகைய சங்கங்கள் தேவை. முதலாளிகளும் சங்கத்தில் இருப்பது அவசியம். இல்லாவிட்டால், தொழிலாளி ஒன்றைக் கேட்பான்; முதலாளி அதை மறுப்பான். முதலாளி ஒன்றை விதிப்பான்; தொழிலாளி செய்ய மறுப்பான். சண்டையும் பகையுமே விளையும்.

அதற்கு மாறாக முதலாளிகளும் தொழிலாளிகளும் கூடி இத்தகைய சங்கங்களை நிறுவிக்கொண்டால், சங்கம் ஒரே நோக்கமுடையதாயிருக்கும்; சங்கத்து உறுப்பினர்கள் பொது

நலத்தைக் கவனிப்பார்கள் ; குறைகள் நீங்கும் ; முன்னேற்றப் பாதையை அவர்கள் நாடுவார்கள் ; நேரம், வேலை, குடும்பக் கூலி, பிள்ளைகளின் கல்வி, தொழிலின் வளர்ச்சி, பொருள் களின் நியாய விலை இவை எல்லாவற்றையும் சங்கமே திட்டம் செய்துகொள்ளும் ; சண்டை நீங்கும் ; சமாதானம் ஓங்கும் ; முதலாளி பாட்டாளி பிரச்சினை தீரும்.

**பாட்டாளிகள் :**

அவர்கள் ஊக்கத்துடன் உழைக்கவேண்டும். எப்போ தும் கூலி உயர்வையே கேட்பார்கள் ; வேலையைமட்டும் சரி யாய்ச் செய்யமாட்டார்கள். சோம்பேறிகள் சிலர் நாள் முழுவதும் வாயடித்துக்கொண்டு, தாங்களும் சரியாக வேலை செய்யமாட்டார்கள், மற்றவர்கள் வேலை செய்யவும் விடமாட் டார்கள். இது தவறு. கடவுளுக்குப் பிரியப்பட, மனச் சான்றின் குரலொலிக்கிணங்கி அவர்கள் உழைப்பது கடன். அதிகம் உழைத்தால், அதிக இலாபம். அதிக இலாபமென் ருல், உயர்ந்த சம்பளம். இதுதான் முறை. அவர்கள் தங்கள் அசட்டைத்தனத்தால் முதலாளிகளுக்கு அதிக சேதத்தை வருவிக்கக்கூடும்.

மேலும், நேர்மையான மனதுடனே முதலாளியின் நிலை மையையும் நோக்கவேண்டும்? அவன் எத்தனை இலட்ச ரூபாய் மூலதனமாகப் போட்டிருக்கிறான் ? அதற்குண்டான குறைந்த வட்டியே அவனுக்கு மாதம் எத்தனை ஆயிரம் ரூபாய் கொடுக்கும்? அவன் தொழிற்சாலையை வீடுகளாக அமைத் தானுனல், எவ்வளவோ வாடகை அவனுக்கு வரும். ஆனதால் இலாபத்தின் ஒரு பெரும் பங்கை அவன் எடுத்துக்கொள்வது சரியே. நிற்க, ஒரு யந்திரம் கெட்டுப்போனாலும், எத்தனையோ ஆயிரம் ரூபாய் செலவு செய்யவேண்டியிருக்கிறது. மேலும், முதலாளி தன் சரீரத்தால் உழைக்காவிடினும், தனது புத்தியை யும், பேச்சுத்திறனையும், படிப்பையும் கொண்டு எவ்வளவோ உழைக்கிறான். இதையெல்லாம் பாட்டாளி மக்கள் எண்ணிப் பார்க்கவேண்டும்.

## ஆகையால்

சமூகம் சீரோங்கவேண்டுமானால்,
மனிதன் தன் மனச்சாட்சியைச்
சன்மார்க்கத்தின்படி சீர்படுத்த வேண்டும்.

வாழ்க்கையில் முக்கிய ஸ்தானத்தைக்
கடவுளுக்குக் கொடுக்க வேண்டும்.

மனிதன் பொருள் சேர்ப்பது தவறல்ல.
ஆனால் சொத்துக்களைத் தேவசட்டப்பிரகாரம்
நீதியோடும்
பிறர் சிநேகத்தோடும்
நற்பிரயோகம் செய்யவேண்டும்.

மனிதன் மனச்சாட்சிப்படி நடந்தால்
கடவுளின் சட்டப்படி நடப்பான்;
நீதியோடு நடப்பான்;
நியாயத்தை நாடுவான்.
பிறர் சிநேகம்
ஒரு மனிதன் மற்றவனைச்
சுரண்டவோ
கொள்ளையடிக்கவோ
சம்மதியாது.
நீதிமட்டிலும் போதாது;
பிறர்சிநேகமும் அவசியம்.

நீதி சண்டையைப் போக்குகிறது;
அவனவனது உரிமையையும்
அவனவனது உடைமையையும்
அளிக்கிறது.
பிறர் சிநேகமோ
எல்லோரையும் ஒன்றித்து
ஒரே குடும்பமாக்குகிறது;
மனிதருள் இருக்கும் பேதத்தைப் போக்குகிறது.
நீதியும் பிறர் சிநேகமும் நிலவ
முயற்சிப்பது சுலபமல்ல.

நீதி வளரவும்
பிறர்சிநேகம் முதிரவும்
மானிட வாழ்க்கை
இங்கும் அங்கும்
இன்புற்றிருக்கவும் வேண்டுமாயின்
கடவுளைத் தொழுது
சன்மார்க்கச் சட்டங்களை அனுஷ்டிக்க வேண்டும்.

## வேலை நிறுத்தம் :

சிலர் எடுத்ததற்கெல்லாம் வேலை நிறுத்தம் செய்வார்கள். பள்ளிப் பிள்ளைகள் வேலை நிறுத்தமென்று சொல்லிப் பள்ளிக்குச் செல்லாமலிருப்பது சிறுபிள்ளைத்தனம். பள்ளியில் குறைகள் இருந்தால், தலைமையாசிரியர் குறைகளைக்கேட்டு நீக்குவதற்காக இருக்கிறார். அவரிடம் சொல்லுவதால் யாதொரு பயனுமில்லையென்றால், பள்ளி நிர்வாகிகள் இருக்கிறார்கள்; கல்வித்துறை அதிகாரிகள் இருக்கிறார்கள். ஆனதால் எக்காரணத்தை முன்னிட்டும் பள்ளிப் பிள்ளைகள் வேலை நிறுத்தம் செய்யலாகாது.

அரசியல் சம்பந்தமாகப் பள்ளிப் பிள்ளைகளை வேலை நிறுத்தம் செய்ய மற்றவர்கள் கேட்டுக் கொள்வது தவறு. கட்சித் தலைவர்கள் இதனால் மாணவர்களுக்கும் சமூகத்துக்கும் கேடு வருவிப்பவராவார்கள். மாணவர்கள் அரசியலைப்பற்றிய காரியங்களில் அக்கறை காட்டலாம்; அவைகளை அறிந்து கொள்ளலாம்; நிர்வாக ஊழல்கள், கட்சி ஊழல்கள் இவைகளை அகற்றுவதற்கான சொந்தக் கருத்துக்களைக் கொண்டிருக்கலாம். ஆனால் மாணவர்கள் அரசியலிலோ, அரசியல் கட்சிகளிலோ ஈடுபடக் கூடாது. கல்வி கற்கும் காலத்தில், படிப்பில் புத்தியைச் செலுத்தி, பிற்காலத்தில் தாங்கள் சமூகத்திற்குப் பயன்படக் கூடிய உறுப்பினர்களாயிருக்கப் பயிற்சி பெற வேண்டும். இதுதான் புத்தியுள்ள அரசியல் தலைவர்கள் மாணவர்கட்குக் கொடுக்கும் புத்திமதி.

பாட்டாளி மக்கள் வேலை நிறுத்தம் செய்யலாமா? வேலை நிறுத்தங்களால் முதலாளிக்கும் அவன் குடும்பத்துக்கும் சேதம்; பொது மக்களுக்கு இதனால் பெரும் கேடு. வேலை நிறுத்தம் செய்வதற்குத் தகுதியான காரணம் தேவை. நியாயமான குறைகளை முதலாளிகளிடம் பாட்டாளிகள் எடுத்துக் கூறியும் அவைகளை நீக்குவதற்கு முதலாளிகள் யாதொரு முயற்சியும் எடுக்காதது, பலவகையில் சமரசம் அடைய முயற்சித்தும் முதலாளி விட்டுக் கொடாமல் இருப்பது இவைபோல்வன தக்க காரணங்களாம். எல்லா வழிவகைகளிலும் சமரசம் காணாமல் தோல்வியுற்ற பாட்டாளி மக்கள் முதலாளிக்கு முன் எச்சரிக்கை செய்து வேலை நிறுத்தம் செய்யலாம். அப்படி வேலை நிறுத்தம் செய்தாலும், தங்கள் கட்சியோடு சேராமல் வேலைக்குப் போகும் மற்றத் தொழிலாளிகளை அடிப்பது, தடுப்பது, அல்லது முதலாளியின் பொருளுக்குச் சேதம் வருவிப்பது கூடாது.






பொதுவுடைமை நமது நாட்டு அரசியல் கட்சிமட்டுமல்ல. அது அகில உலகக் கட்சி. பாட்டாளி பிரச்சனையைத் தீர்த்து ஒழிப்பதற்காக உலகிற்கே பணியாற்ற உதித்திருப்ப தாகக் கூறிக்கொள்ளும் கட்சி. ஆதலால் இக்கட்சியைப்பற்றி நாம் அறிந்திருப்பது அவசியம்.

கம்யூனிசம் அல்லது பொதுவுடைமை இயக்கம் 1917-ம் ஆண்டில் நிக்கலஸ் லெனின் என்பவரால் மாபெரும் புரட்சி யுடன் ருஷியா நாட்டில் நிறுவப்பட்டது. இவ்வியக்கத்தின் கொள்கைப்படி, "எல்லாரும் சமமானதால் சமூகத்தில் எளியவர் சொத்துக்காரர், முதலாளி பாட்டாளி என்னும் வேறுபாடுகள் கூடாது. எல்லோருடைய வாழ்க்கைத்தரமும் உயர்த்தப்பட வேண்டும். சமூக அநீதிகளுக்கும் உயர்வுதாழ்வுக்கும் தனிச் சொத்துரிமையே காரணம். ஆக்கல், உற்பத்தி எல்லா வற்றையும் அரசு எடுத்துக்கொள்ளவேண்டும். எல்லாம் தேசீயமாகிவிட்டால், எல்லாம் எல்லாருக்கும் பொதுவாகிறது, பொதுவுடைமை."

இவ்வியக்கம் உலகாதயத்தை அடிப்படையாகக் கொண் டது. அவர்கள் வழியில்—சித்து என்பது கிடையாது. ஆகையால் கடவுள் இல்லை; ஆன்மா இல்லை; மறுமையில்லை; மதம் ஒரு போதைப் பொருள்; ஒரு அபின். அரசு ஒன்று தான் கம்யூனிஸ்டுகளுக்கு எல்லாமாய் இயங்குவது.

இப்பொதுவுடைமைத் தோழர்கள் உலகத்திலுள்ள எல்லா நாடுகளிலும் பொதுவுடைமை அரசை ஏற்படுத்தி, அகில உலகத் தொழிலாளர்கள் அனைவரையும் இணைத்து ஓராட்சியின் கீழ் சேர்க்க முயற்சிக்கவேண்டியவர்கள்;

வருந்தி உழைக்கவேண்டியவர்கள். இந்தக் குறிக்கோளை அடைவதற்கு கிளர்ச்சிகள், புரட்சிகள், வர்க்கப்போர், துவேஷம், ஒரே வார்த்தையில் எந்தெந்த முறையைக் கையாண்டால் தங்கள் காரியத்தைச் சாதிக்கலாமோ, அவைகளையெல்லாம் அவர்கள் பயன்படுத்தவேண்டும். நல்லவை கெட்டவையென்று அல்ல. கட்சிக்கொள்கைக்கு வெற்றி கொடுக்கக் கூடியவை நல்லவை; தோல்வி கொடுக்கக்கூடியவை தீயவை! மேலும் கடவுள் இல்லையென்றபின், நல்லது கெட்டது என்பதை எதைக்கொண்டு நிச்சயிப்பது? கட்சியின் நலனைக் கொண்டுதானே. ஒற்றர்களை அனுப்புவார்கள்; கலைஞர்களை அழைப்பார்கள். பேசும் படம் திரையிடுவார்கள். சர்க்கஸ் குழுவினர் உலகெல்லாம் செல்வார்கள்.

லெனின்தான் கம்யூனிஸ்டுகளின் தந்தை. மார்க்சியம் தான் கம்யூனிஸ்டின் கொள்கை.

**நாம் ஏற்றுக்கொள்ளலாமா?**

இங்கே நாம் அரசியல் கட்சியாய்மட்டும் பொதுவுடைமையைக் கருதுவதில்லை. ஏனெனில் அது அரசியல் கட்சிமட்டுமல்ல. அதை ஒரு மதம் என்றால் மிகையாகாது. அரசியல் கட்சியாகப் பணியாற்றுவதெல்லாம் அதிகாரத்தைக் கைப்பற்றி ருஷியாவின் போதனைப்படி கம்யூனிஸ்ட் ஆட்சியை நிறுவுவதற்கே.

**1. நாத்திகம் :**

கம்யூனிசக் கொள்கைகள் நாத்திகக் கொள்கைகள். எல்லாம் சடப்பொருளிலிருந்து வந்தவை. மனிதனுக்கும் மாட்டுக்கும் முக்கிய வேறுபாடில்லை; இரண்டும் சடப்பொருளாலானவை. மனிதனுக்கு ஆன்மா இல்லை. அவன் நித்தியப் பேற்றுக்கு உண்டாக்கப்பட்டவனல்லன். இவ்வுலகமே சதம். இவ்வுலக இன்பமே பேரின்பம். ஆகையால் தான் கம்யூனிஸ்டுகள் செல்லும் நாடுகளில் கடவுள் பற்றை அகற்ற முயற்சிக்கிறார்கள்; மதத்தைத் தாக்குகிறார்கள்.

தமிழ் நாட்டு மக்கள், என்றும் கடவுள் பற்றிலே திளைத்தவர்கள், திருவள்ளுவரின் குறளைப் பாராட்டிவருபவர்கள் நாத்திகத்தை ஏற்றுக்கொள்ளக் கூடுமா? 'தெய்வத்தை ஒரு நாளும் மறக்க வேண்டாம்' என்று சிறு குழந்தைகளாயிருந்ததிலிருந்து கடவுட் பற்றுக் கொண்டவர்கள் நாம் என்பதை நினைவுபடுத்திக் கொள்ளவேண்டும்.

## குறிப்பு

இந்தியக் கம்யூனிஸ்டுகள் நம் நாட்டு மக்களின் கடவுட் பற்றை நீக்குவது எளிதல்ல எனக் கண்டார்கள். தங்கள் விளம்பர வழியைச் சற்றே மாற்றிக் கொண்டனர். நாங்கள் கடவுள் இல்லையென்று சொல்வதில்லை என்கின்றனர். பொதுத் தேர்வு சமயத்தில் கிறீஸ்துவ கிராம மக்களிடம், நீங்கள் மாதா கோயிலுக்குப் போகிறதை நாங்கள் தடுப்பதில்லையென்றனர். கேரளாவில் அல்போன்சா என்னும் கிறீஸ்துவக் கன்னிகையின் படத்தை மக்களுக்குக் காண்பித்து, தாங்களும் கிறீஸ்துவத் தத்துவங்களைக் கொண்டிருப்பவர்கள் போல் பிரச்சாரம் செய்தார்கள்.

இதெல்லாம் வீண் பிரச்சாரம்! கடவுளிடம் நம்பிக்கையுண்டு என்று சொல்லும் கம்யூனிஸ்டு, தன் கட்சிக்கொள்கையை அறியவில்லை; அல்லது மக்களை ஏமாற்றும் கருத்தோடு பொய் பிரச்சாரம் செய்கிறான்.

## 2. தனிச் சொத்துரிமை :

தனிச் சொத்துரிமை இயற்கை யுரிமை என்று கவனித்தோம். இதை எந்த அரசும் பறிக்க முடியாது, கடவுளிடமிருந்து வந்த உரிமை. ஆனால் அவர்கள் கொள்கைப்படி கடவுள் இல்லையே!

ஒருவன் தனிச் சொத்தைத் துஷ்பிரயோகம் செய்வது தவறு. அதனால் தனிச் சொத்துரிமையே தவறு என்பது பெருந்தவறு. கண்பார்வையைத் தகாதவைகளில் செலுத்துவது தவறு. ஆகையால் கண் பார்வையே தவறு; கண்ணைப் பிடுங்கி எறிய வேண்டுமென்பது மதியீனம். அடிக்கடி தடுமம்

பிடித்தவனுக்கு மூக்கையே அறுத்து எடுத்துவிடுவதா முறை? அதுபோல் தனிச்சொத்துரிமையின் துஷ்பிரயோகத்தால் சில சமூக நோய்கள் இருப்பதால், தனிச் சொத்துரிமையை முழுவதும் அழிப்பது சரியல்ல.

கம்யூனிஸ்டுகள் முதலாளித்துவத்தை அறவே ஒழிக்கிறார்கள். ஆனால் தனிப்பட்ட முதலாளிகளிடமிருந்து எல்லாவற்றையும் பறித்து, அரசிடம் ஒப்படைத்து அதை ஒரு பெரிய முதலாளியாக்குகிறார்கள். இப்போதாகிலும் முதலாளிகளுடைய கொடுமையை நீக்க, பாட்டாளிகள் அரசிடம் முறையிட்டு கொள்கிறார்கள், ஆனால் எல்லாம் தேசியமாக்கப் பட்டு விட்டால், அரசுதான் முதலாளி. அங்கே நடக்கும் ஊழல்களையும், கொடுமைகளையும் யாரிடம் சொல்லிக் கொள்வது? கட்சித் தலைவர்களே பொதுவுடைமை நாடுகளில் முதலாளிகளுக்கு மேலான செல்வாக்கில் வாழ்ந்து, தொழிலாளர்களைக் கொடுமைப்படுத்தி வருவது உலகமறிந்த உண்மை.

**3. சமத்துவம் :**

சமத்துவம்! பொதுவுடைமைக்காரர்களிடம் எதில் சமத்துவமிருக்கிறது? சமக் கூலியா? ருஷியாவிலும் இல்லை. சம்பளத்தில் வேறுபாடுண்டு. சம்பளத்தில் வேறுபாடிருந்தால், கண்டிப்பாய் வாழ்க்கைத் தரத்திலும் வேறுபாடிருக்கும். உயர்வு தாழ்வு ஒழிவது எப்படி? கட்சித் தலைவர்களும் விவசாயிகளும் சமமா? எதில்?

**4. சுயாதீனம் :**

பொதுவுடைமை நாடுகளில் குடிமக்கள் அனைவரும் யந்திரங்கள் என்றால் மிகையாகாது. எல்லாரும் அரசு குறிப்பிட்ட வேலையைச் செய்ய வேண்டும். தங்களுக்கு விருப்பமான வேலையைத் தேட முடியாது. சுயாதீனமெங்கே?

யதேச்சாதிகாரத் தலைவனால் அரசு நடைபெறுவதால் மக்கள் தங்கள் வாக்குரிமையை நன்கு பயன்படுத்திக் கொள்ளும் அளவுக்குத் தேர்தல்கள் நடைபெறமுடியாது. எங்கும் ஒற்றர்கள்! தலைவர்கள் வேலையே நிச்சயமில்லை. சுயாதீனமெங்கே?

## 5. இரும்புத்திரை :

ருஷியாவில் எங்கும் பாலும் தேனும் வழிந்தோடுகிறது; மக்கள் அனைவரும் இன்பபுரியில் சுபிட்சமாய் வாழுகிறார்களென்றெல்லாம் நம் நாட்டுக் கம்யூனிஸ்டுகள் பறைசாற்றுகிறார்கள். அந்த இன்ப வழியைச் சுற்றிப்பார்க்க ஏன் வெளி நாட்டு மக்கள் அனுமதிக்கப்படுவதில்லை? நம் நாட்டுக்கு அன்னியர் வருகிறார்கள். தங்கள் விருப்பப்படி ஊர், கிராமம் எல்லாம் சுற்றுகிறார்கள். மக்களோடு உரையாடுகிறார்கள். அப்படி ஏன் ருஷியாவில் வெளி மக்கள் போய் நேரடியாய்ப் பார்ப்பதற்குத் தடை செய்கிறார்கள்? பள்ளிக்குக் கல்வி அதிகாரிகள் வரும்போது, எல்லாம் சுத்தமாய், ஒழுங்காயிருக்கும். கவர்னர் நமது நகருக்கு வரும்போது, வீதிகளையும் சாலைகளையும் எத்தனைச் சுத்தம் செய்கிறார்கள்! எத்தனை அலங்காரம்! இதிலிருந்து கவர்னர் நமது நகர் முழுவதும் எப்போதும் இப்படித்தான் இருக்குமென்று நினைப்பாரானால் எத்தனை பேதமை! அவர் மட்டும் நடுவீதியைத் தாண்டி, பக்கத்துத் தெருவுள்ளே சென்றிருந்தால், சாக்கடை நீரில் அவர் நீந்தியிருக்க வேண்டுமல்லவா? நகர சபை அதிகாரிகள் கவர்னரை ஒரு சில இடத்துக்குமட்டும் குறிப்பாய் அழைத்துச் செல்கிறார்கள். அதுபோலவே ருஷியாவில் வெளியிலிருந்து செல்லும் மக்கள் குறிப்பிட்ட இடங்களைப் பார்க்கிறார்கள். ஏமாந்து, அங்கே மக்கள் நூறுக்கு நூறு சுபிட்சமாய் வாழ்கிறார்கள் என்று எண்ணுகிறார்கள். இதைத்தான் இரும்புத்திரை என்பது. அங்கே இரும்பினால் யாதொரு திரையும் தொங்கவில்லை. அன்னியர் தங்கள் விருப்பத்துக்குப் போய் எதையும் காணமுடியாது என்பதைத் குறிக்கத் தான் இரும்புத்திரை என்கிறோம்.

ஆதலால் நாத்திகக் கொள்கைகள் நமக்கல்ல. மனிதனின் சுயாதீனத்தைப் பாதிக்கும் கட்டுப்பாடுள்ள அரசு நமக்கல்ல. அயல் நாட்டுடன் தொடர்பு கொண்டு, ருஷியாவின் சொற்படி கேட்டுக் கொண்டிருக்கும் கட்சி நமக்கல்ல.

**நாம் தமிழர்கள்! சுயாதீன மக்கள்!**

# ஆத்தி சூடி

(ஔவையார்)

1. அறஞ்செய விரும்பு

—தருமம் செய்ய ஆசைப்படு.

2. ஆறுவது சினம்

—கோபம் தணியத் தருவதாம்.

3. இயல்வது கரவேல்

—கொடுக்கக்கூடியதை யாசிப்பவர்க்கு ஒளியாதே.

4. ஈவது விலக்கேல்

—மற்றொருவர் ஒருவருக்குக் கொடுப்பதை தடுக்காதே.

5. ஊக்கமது கைவிடேல்

—தைரியத்தைக் கைவிடாதே.

6. ஏற்ப திகழ்ச்சி—

—இரந்துண்டு வாழ்வது பழிப்பாகும்.

7. ஐய மிட்டுண்

—பிச்சையிட்டுப் பின்பு உண்ணு.

8. ஓதுவ தொழியேல்

—எப்பொழுதும் வாசிப்பதை விடாதே.

9. ஔவியம் பேசேல்

—பொறாமைகொண்டு பேசாதே.

10. அஃகஞ் சுருக்கேல்

—தானியங்களைக் குறைத்து அதிக லாபத்திற்கு விற்காதே.

11. கண்டொன்று சொல்லேல்

—பொய்சாட்சி சொல்லாதே.

12. சனி நீராடு

—சனிக்கிழமைதோறும் எண்ணெய் தேய்த்து முழுகு.

13. இணக்கமறிந் திணங்கு

—நற்குணத்தையறிந்து சிநேகம் செய்.

14. தந்தைதாய்ப் பேண்

—தாய்தந்தையரைக் காப்பாற்று.

15. நன்றி மறவேல்

—நன்றி செலுத்த மறவாதே.

16. இயல்பலா தனசெயேல்

—இயற்கைக்கு மாறான செயல்களைச் செய்யாதே.

17. வஞ்சகம் பேசேல்

—கபட வார்த்தைகளைப் பேசாதே.

18. அழகலா தனசெயேல்

—இழிவான காரியங்களைச் செய்யாதே.

19. இளமையிற் கல்—

—சிறுவயதிலேயே கற்றுக்கொள்.

20. அறனை மறவேல்

—தருமத்தை ஒருபோதும் மறவாதே.

21. அனந்த லாடேல்

—அதிகமாக நித்திரை செய்யாதே.

22. கடிவது மற

—சினந்து பேசுவதை மறந்துவிடு.

23. கிழமைப் படவாழ்

உன் உடம்பாலும் பொருளாலும் பிறருக்கு நன்மைசெய்துவாழு.

24. கீழ்மை யகற்று

—இழிவான செயல்களை அகற்று.

25. குணமது கைவிடேல்

—நற்குணங்களைக் கைவிடாதே.

26. கூடிப் பிரியேல்

—நல்லவரை சிநேகித்து பின் அவரை விட்டுப் பிரியாதே.

27. கெடுப்ப தொழி

—பிறருக்குக் கேடு செய்வதை விட்டு விடு.

28. கேள்வி முயல்

—கற்றவர் சொல்லுபவைகளைக் கேட்க முயற்சி செய்.

29. கைவினைக் கரவேல்

—தெரிந்த கைத்தொழிலை பிறருக்கு ஒளியாமற் செய்.

30. கொள்ளை விரும்பேல்

—பிறர்பொருளை அபகரிக்க இச்சிக்காதே.

31. சித்திரம் பேசேல்

—பொய் மொழிகளை மெய்போலப் பேசாதே.

32. சுளிக்கச் சொல்லேல்

கேட்பவர்க்குக் கோபமும் வெறுப்பும் உண்டாகும்படி பேசாதே.

33. சூது விரும்பேல்

—சூதாடுவதை விரும்பாதே.

34. செய்வனத் திருந்தச்செய்

—செய்யுங்காரியங்களைத் திருத்தமாகச் செய்.

35. ஸீசயெனத் திரியேல்
—பெரியோர் சீ என்று வெறுக்கும்படி வீணய்த் திரியாதே.
36. சோம்பித் திரியேல்
—சோம்பேறியாகத் திரியாதே.
37. தீவினை யகற்று
—பாவச்செயல்களைச் செய்யாமல் நீக்கு.
38. தெய்வ மிகழேல்
—கடவுளை நிந்தியாதே.
39. தொன்மை மறவேல்
—பழமையாகிய சிநேகத்தை மறந்து விடாதே.
40. நன்மைக் கடைப்பிடி
—புண்ணியத்தையே உறுதியாகப்பிடி.
41. நுண்மை நுகரேல்
—நோயைத் தரும் சிற்றுண்டிகளை உண்ணுதே.
42. நூல் பலகல்—
—அறிவை வளர்க்கும் பல நூல்களையும் கற்றுக்கொள்.
43. பேதைமை யகற்று
—அறியாமையை நீக்கிவிடு.
44. பொருடனைப் போற்றிவாழ்
—பணத்தை வீண் செலவு செய்யாமல் காத்து வாழு.
45. மீதூண் விரும்பேல்
—மிகுதியாக உணவுண்டலை இச்சியாதே.
46. மூர்க்கரோ டிணங்கேல்
—மூர்க்கத்தன்மையுள்ளவர்களுடன் சேர்ந்து பழகாதே.
47. மொழிவ தறமொழி
—சொல்லுவதை ஐயமின்றி திருத்தமுறச் சொல்லு.
48. வீடு பெறநில்
—மோட்சத்தை பெறும்படி சன்மார்க்கத்திலே நில்லு.
49. உத்தம ஞயிரு
—நற்குணங்களிலே மேம்பட்டவனுகி வாழு.
50. வைகறைத் துயிலெழு
—விடியற்காலத்தில் தூக்கத்தைவிட்டு எழு.

# உலகநீதி

ஓதாம லொருநாளும் இருக்கவேண்டாம்
ஒருவரையும் பொல்லாங்கு சொல்லவேண்டாம்
மாதாவை யொருநாளும் மறக்கவேண்டாம்
வஞ்சனைகள் செய்வாரோ டிணங்கவேண்டாம்
போகாத இடந்தனிலே போகவேண்டாம்
போகவிட்டுப் புறஞ்சொல்லித் திரியவேண்டாம்
நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்
நிலையில்லாக் காரியத்தை நிறுத்த வேண்டாம்[1]
நஞ்சுடனே யொருநாளும் பழகவேண்டாம்
நல்லிணக்கம்[2] இல்லாரோ டிணங்கவேண்டாம்
அஞ்சாமல் தனிவழியே போகவேண்டாம்
அடுத்தவரை யொருநாளுங் கெடுக்கவேண்டாம்
மனம் போன போக்கெல்லாம் போகவேண்டாம்
மாற்றானை யுறவென்று நம்பவேண்டாம்
தனந்தேடி யுண்ணுமற் புதைக்கவேண்டாம்
தருமத்தை யொருநாளும் மறக்கவேண்டாம்
சினந்தேடி யல்லலையுந்[3] தேடவேண்டாம்
சினந்திருந்தார் வாசல்வழிச் சேறல்வேண்டாம்[4]
குற்றமொன்றும் பாராட்டித் திரிய வேண்டாம்
கொலை களவு செய்வாரோ டிணங்க வேண்டாம்
கற்றவரையொருநாளும் பழிக்கவேண்டாம்
கோயில்லா ஊரிற்குடி யிருக்கவேண்டாம்
மனையாளைக் குற்றமொன்றுஞ் சொல்லவேண்டாம்
தாழ்ந்தவரைப் பொல்லாங்கு சொல்லவேண்டாம்
வார்த்தை சொல்வார் வாய்பார்த்துத் திரியவேண்டாம்
மதியாதார் தலைவாசல் மிதிக்கவேண்டாம்
மூத்தோர் சொல் வார்த்தைதனை மறக்கவேண்டாம்
முன்கோபக் காரரோடிணங்க வேண்டாம்

---

1 நிறுத்தவேண்டாம் = நிலை நாட்டாதே.
2 நல் இணக்கம் = நல்லவர்களுடைய நட்பு
3 அல்லலையும் = துன்பத்தையும்
4 சேறல் வேண்டாம் = செல்லாதே.